உ

ஸ்ரீமார்க்கஸஹாய ஸ்வாமினே நம:

# மஹாமஹோபாத்யாய, பிரம்மஸ்ரீ
# மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள்
## திவ்ய சரித ஸங்க்ரஹம்



2013

உ

ஸ்ரீமார்க்கஸஹாய ஸ்வாமினே நம:

# மஹாமஹோபாத்யாய, பிரம்மஸ்ரீ

# மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள்

## திவ்ய சரித ஸங்க்ரஹம்




கவிஸார்வபௌம

**ஸ்ரீ Y. மஹாலிங்க சாஸ்த்ரிகள், M.A.,B.L.,**

ஆங்கிலத்தில் எழுதியதைத் தமிழாக்கம் செய்தவர்:

**ஸ்ரீ Y. ஸாம்பமூர்த்தி, B.A.,**

**(Retd. Dy. Estt. Officer, BARC, Bombay)**





**Publisher:**

**MANNARGUDI PERIYAVA SEVA SAMITHI**

"Gurukripa" 6, 77th Street, 16th Avenue,
Ashok Nagar, Chennai - 600 083.
Phone : 044 - 2489 2132

**2013**

**(Originally published in 1986**
**by ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா)**





விலை : ரூ. **40/-**

முதல் பதிப்பு : 1986 - 1000 பிரதிகள்
இரண்டாம் பதிப்பு : 2013 - 1000 பிரதிகள்

## பொருளடக்கம்

## FOREWORD

Shri Y. Mahalinga Sastri was a gifted poet in Sanskrit. At the same time he was a facile writer both in English and Tamil. Graduated from the Presidency College and trained in modern literature, his powers of expression sought more the medium of Sanskrit. Born of a family of reputed Sanskrit pundits, it was natural that he inherited the capacity to gain recognition in the ancient tongue. But added to it was his inborn sense of values which alone made him seek his solace in making himself felt on others in the chosen vehicle of Gods.

The fact he was the great-grandson of the famous Brahmasri Mahamahopdhyaya Raju Sastrigal of mannargudi enabled him to lisp on Sanskrit even from quite a young age. His father Mahamahopdhyaya Yagnaswami Sastri was also a great scholar and fluent speaker in Sanskrit. He had written the life of his grandfather in Sanskrit as a Champu-Kavya named 'Thyagaraja Vijayam'. That proved the source for Mahalinga Sastri to dwell in English on the achievements of his ancestor- his great grandfather. In twelve chapters he had attempted to trace the birth, the beginning of scholarship , the hard schooling Sri Raju Sastrigal had under eminent masters of the various Darshanas, such as Mimamsa, Vedanta Nyaya, Sahitya, Vyakarna-all of which were exacting of immense efforts to reach perfection. He easily mastered them and became himself in turn a renowned teacher under whom students including Sanyasins received instruction. His reputation was so high that invitations came from various quarters including Rajas and affluent house-holders for imparting to them the learning . After having lived a full life

of 88 years, he passed away much honoured for his memory.

The present Tamil translation is of the English sketch by Sri Mahalinga Sastri, of Brahmasri Raju Sastrigal, which appeared in the book **'SAINTS AND SAGES'** edited by **Swami Sivananda of Hrishikesh.** The writer in Tamil is a brother of Sri Mahalinga Sastri and wields a smooth, racy style which has rendered a needed service to readers in widening the knowledge of the life of the 'Great one' as throughout Sastri refers to him. This book will certainly enlighten people to know authentically of the great master of infallible learning and teaching.

Madras-18 — **K. CHANDRASEKARAN**
12-5-86 — President, Sanskrit Academy, Madras.

**Footprints on the Sands of Time**

Lives of greatmen all remind us
We can make our lives sublime
And departing they leave behind us
Footprints on the Sands of Time.

**H.W. Longfellow**

உ

# ஸ்ரீ முகம்

Sri Chandramouleeswaraya Namaha
Sri Sankara Bhagavadpadacharya Paramparagatha
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**

**SRIMATAM : : SAMASTHANAM**

**KANCHEEPURAM - 631502.**

Camp : டேராடூன் Date : 17.05.1986

மஹாமஹோபாத்யாய மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள் என்று பிரஸித்தி அடைந்த தியாகராஜமக: அப்பய்ய தீக்ஷிதர் வம்சத்தில் பிறந்தவர். தமது குலப் பெருமைக்கு ஏற்ப ஸகல சாஸ்திரங்களிலும் இணையற்ற பாண்டித்யம் பெற்றுத் தம் கிருஹத்திலேயே குருகுலம் நடத்திச் சிறந்த வித்வான்களை உருவாக்கின குலபதி, நமது பீடத்தின் சார்பில் கும்பகோணத்தில் அத்வைத ஸபை ஆரம்பித்தபோது ஸபா வித்வான் என்ற பதவியை அலங்கரித்தவர். அவருடைய சரித்திரத்தை அவருடைய பேரனான மஹாமஹோபாத்யாய யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் தியாகராஜ விஜய சம்பூ என்று ஸம்ஸ்க்ருதத்தில் காவ்யமாக எழதினார். அவருடைய குமாரர் ய. மஹாலிங்க சாஸ்த்ரிகள் அதை தழுவி ஆங்கிலத்தில் எழதினார். இப்பொழுது அந்த ஆங்கில நூலை ஸ்ரீ ய. சாம்பமூர்த்தி தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுகிறார் என்று அறிந்து சந்தோஷிக்கிறோம். இந்த சரித்திரம் வித்வான்களுக்கும் ஆஸ்திகர்களுக்கும் ஊக்கமளித்து வித்யையில் ச்ரத்தை உண்டு பண்ணி அதன் பயனாக ஆத்ம குணங்களை வளர்க்கட்டும் என ஆசீர்வதிக்கிறோம்.

**நாராயண ஸ்ம்ருதி**

## MANNARGUDI PERIYAVA SEVA SAMITHI

"Gurukripa", 6, 77th Street, 16th Avenue, Ashoknagar,
Chennai - 600 083. Ph: 24892132

Mannargudi Periyava Seva Samithi was established with the blessings of Sankaracharyas of Kanchi in the year 2009 by the descendants of Mannargudi Periyava to celebrate his Jayanthi, every year, in a traditional manner and to publish his works.

In the year 2010, on the occasion of 195th Jayanthi the first book "Rathoshthava Pancharathnam" was released along with the text Arthanareeswara ashtakam.

This year on the occasion of 198th Jayanthi Celebrations (to be held on 30th May 2013), it is proposed to release the re-print of the Biography of Mannargudi Periyava (written under the title Thiyagaraja Vijayam by MM Bramha Sri Yagnaswami sastrigal, grandson and student of Periyava in Sanskrit as a Champu Kavya which was translated into English by MM Sri Y. Mahalinga sastri, great grandson of Periyava and this was translated into Tamil by Sri Y Sambhamurthy younger brother of Y Mahalinga Sastri in the year 1986. This Tamil version is being reprinted now).

In this reprint of the Biography, the descendants of the daughters of Mannargudi Periyava has been added.

**Mannargudi Periyava Seva Samithi**
Chennai
06/05/2013

# முன்னுரை

*ஸர்வாகமத்ருஷ்த் ஸார ஸர்வங்கஷ மஹாமதீன்*
*வித்யோதி ததிச: கீர்த்யா வந்தே பித்ருபிதாமஹான்*

மஹாசயர்களான எனது கொள்ளுத் தாத்தா அவர்களை வணங்குகிறேன்.

*தர்மே மதிம் விதநுதே தநதே ச பக்திம்*
*தாமோதரே தாஸுதாகர சேகரே வா |*
*ஸூதே தயாதிமகுணாந் ஸுக்ருதம் ப்ரஸூதே*
*சேத: ப்ரவர்த்தயதி ஸஜ்ஜன ஸங்கதேஷு ||*

"பெரியோர்களின் சரித்திரம் கேட்டறியப்பட்டால் தரும புத்தியும், ஈச்வர பக்தியும் உண்டாவதுடன், தயை முதலிய குணங்கள் ஓங்கிப் புண்ணியம் பெருகிச் சித்தம் சாதுக்களின் அண்மையை நாடும்".

சமீப காலத்தில் பிரம்மரிஷி துல்யர்களாய் விளங்கின மஹானான மன்னார்குடிப் "பெரியவாள்" என்றே குறிப்பிடப்பட்ட பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்கள் வம்சத்தில் வந்த என்னை அவர்களின் வரலாற்றைத் தமிழில் எழுதிக் கொடுக்கும்படி சிவபுராண ஞானபூஜகர் ஸ்ரீ ஆங்கீரஸ S.வேங்கடேச சர்மா அவர்கள் தான் தூண்டுதல் செய்தார்கள். நான் இரண்ட வருடத்திற்கு முன்பே எனது தகப்பனார் பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளின் சரித்திரத்தை எழுத ஆரம்பித்தேன். ஆனால் எனது முயற்சி ஏதேதோ காரணங்களால் பூர்த்தி செய்ய முடியாமல் தடைபட்டு வந்தது. குருவின் சரித்திரத்திற்குப் பிறகல்லவோ சிஷ்யனின் வரலாறு வரவேண்டுமென்று சொல்வது போல், ஸ்ரீ சர்மாவின் தூண்டுதல் வந்த உடனேயே

---

1. இது ஸ்ரீ Y. மஹாலிங்க சாஸ்த்ரிகளால் இயற்றப்பட்டது.
2. இது பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளால் இயற்றப்பட்டது.

"பெரியவாளின்" சரித்திரத்தை எழுத ஆரம்பித்த என முயற்சி அவர்களின் அனுக்ரஹ விஷேத்தால் என்னையுமறியாமல் முழு மூச்சுடன் தங்கு தடையின்றி சீக்கிரத்திலேயே முடிந்தது.

மன்னார்குடிப் பெரியவாளின் சரித்திரத்தை அன்னாரின் பேரனும், சிஷ்யனுமான எனது தகப்பனார் பிரம்மஸ்ரீ யக்ஞ ஸ்வாமி சாஸ்தத்ரிகள் "தியாகராஜ விஜயம்" என்ற சம்பு காவ்யமாக ஸமஸ்கிருதத்தில் எழதி கி.பி. 1904லிலேயே அதாவது பெரியவாள் மறைந்த சில மாதங்களுக்குள்ளேயே வெளியிட்டுவிட்டார்கள். இருபது வருடங்களுக்குப் பிறகு அதைத் தழுவி ஆங்கிலத்தில் ஒரு சரித்திரமாக எனது மூத்த தமையனார் ஸ்ரீ ய. மகாலிங்க சாஸ்த்ரி M.A.,B.L., எழுதி வைத்தார்கள். ஆனால் அதற்கு ஒரு பதிப்பாளர் கிடைக்காமல் அது புத்தக அலமாரியில் கைப்பிரதியாகவே கிடந்தது.

கும்பகோணம் அத்வைத ஸபையின் 54வது வருட ஸதஸ் கி.பி. 1948ல் மன்னார்குடியில் நடத்தப்பட்டது. அதே ஊரில் அரை நூற்றாண்டுக்கு மேல் வித்யாபீடத்திலமர்ந்து அரசாட்சி செய்தவரும், அத்வைத ஸபையை ஆரம்பித்து வைத்து முதல் உபன்யாஸமாக "காயத்ரீ மகிமை" யை முழக்கம் செய்தவர்களுமான பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளின் மஹிமையை ஜனங்கள் அறியும் வண்ணம் ஒரு வரலாறு தமிழில் வர வேண்டுமென்ற ஸ்ரீ காங்சிப் பெரியவாளின் ஆக்ஞானு ஸாரம் ஸ்ரீ ய. மகாலிங்க சாஸ்த்ரிகளால் ஒரு சரித்திர சுருக்கம் எழுதப்பட்டு அவ்வயம் வெளியிடப்பட்டது.

இதைப் பார்த்த ஹ்ருஷீகேச ஆச்ரமத் தலைவர் ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதீ அவர்கள் ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளின் முழுச் சரித்திரத்தையும் ஆங்கிலத்தில் எழுதியனுப்பும்படி பணித்த போது ஸ்ரீ மகாலிங்க சாஸ்த்ரிகளுக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை அளவிட முடியாது. உடனேயே அலமாரியில் பத்திரப்படுத்தியிருந்த கைப்பிரதியை எடுத்து, பெரியவாளின் மாட்டுப் பெண்ணான (எங்கள் பாட்டியுமான) ஸ்ரீமதி மங்களத்தம்மாள் அலுப்பு சலிப்பு இல்லாமல் "பாஷ்பவாரி பரிபூர்ண லோசனை" யாய்ச்சொன்ன பெரியவாளின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் பலவற்றைப் பற்றிய குறிப்புகளையும் இணைத்து சரிதத்தை மறுபரிசீலனை செய்து

அனுப்பி வைத்தார்கள். ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதிகளும் இதை 1951ல் வெளியிட்ட "Saints and Sages" என்ற புத்தகத்தில் முதல் சரித்திரமாக சேர்த்திருக்கிறார்கள்.

இதைத்தான் நான் இப்பொழுது தமிழில் மொழி பெயர்த்துள்ளேன். ஆங்கிலத்தில் எழுதிய ஆசிரியரின் சொல் முறையில் மாற்றமேதுமில்லாமலும் அவரின் சொற்றிறமையை உண்மையாகவும், முழுமையாகவும் பிரதிபலிக்கும் விதத்திலும் தமிழாக்கம் செய்ய முயற்சித்துள்ளேன். பெரியவாளின் சரித்திரம் பல பேர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் செய்யப்பட்டிருக்கும் இம்முயற்சியில் குற்றங்குறையிருப்பினும் வாசகப் பெரியோர்கள் அதைப் பொருட்படுத்த மாட்டார்களென நினைக்கிறேன்.

இதன் கையெழுத்துப் பிரதியை எனது பிரபிதாமகர், பிதா, ஜ்யேஷ்டப்ராதா இவர்களிடம் பேன்பு கொண்ட ஸ்ரீ காஞ்சி முனிவர்களின் பாத கமலங்களில் ஸமர்ப்பித்து அனுக்ரஹம் பெற்ற பிறகே அச்சிற்கு அனுப்பிளேன். அச்சான சில பகுதிகளை ஜகத்குரு ஸ்ரீ புதுப்பெரியவாள் அவர்கள் திவ்ய சமூகத்திற்கு அனுப்பினேன். அவர்களும் கிருபை கூர்ந்து ஸ்ரீமுகம் அனுப்பியுள்ளார்கள்.

எனது தமையனாரின் அத்யந்த சினேகிதரான ஸ்ரீ K.சந்திரசேகரய்யர் ஆங்கிலத்திலும், எங்கள் குடும்பத்திற்கு ஆப்தர்களான "பாஷ்ய பாவக்ஞ" பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்த்திரிகளும் மாயூரம் பிரம்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதரவர்களும் தமிழிலும் இப்புத்தகத்திற்குக் கொடுத்திருக்கும் முன்னுரைகளுக்காக அவர்களுக்கு எனது வந்தனங்களுடன் நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகம் வெளியிடப்படுவதறிந்ததும், மிக்க மகிழ்ச்சியுடன் தாமாக முன்வந்து குருபரம்பரா வந்தனத்தில் எனது கொள்ளுத் தாத்தாவைப் பற்றியதான ச்லோகத்தையும், அணிந்துரையையும் எழுதி அனுப்பிய சிதம்பரம் பண்டிதராஜ பிரம்மஸ்ரீ ஸோமஸேது தீக்ஷிதரவர்களுக்கும் எனது நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இதைத் தனிப்புத்தகமாகவே வெளியிட வேண்டுமென முன்வந்து என்னை ஊக்குவித்த சிவஞான பூஜகர் ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்களுக்கு நான் எவ்வளவு நன்றி சொன்னாலும் போதாது.

எனது அடுத்த முயற்சிகாளக ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் சரித்திரம் அவரது கீர்த்தனைகள், ஸ்ரீ மாகலிங்க சாஸ்த்ரியின் சரித்திரம் அவரது கீர்த்தனைகள் முதலியன பெரியொர்களின் ஆசீர்வாதத்தினால் நிறைவேற வேண்டும் எனப் பிரார்த்திக்கிறேன்.

இப்புத்தகத்தை சிறுவயதிலேயே குலப்பெருமையை அறிந்திருந்த எனது மறைந்த புத்திரன் தியாகு என்ற தியாக ராஜ ஸுப்ரமணியன் நினைவாக அளிக்கிறேன்.

மதறாஸ்-28.
12.05.1986

**Y. ஸாம்பமூர்த்தி**

# அறிமுகம்

மஹாமஹோபாத்யாய மன்னார்குடி பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்களின் வாழ்க்கை வரலாறு பற்றிய நூல் தமிழில் அச்சிடப்படுவதைப் பார்க்க மிகவும் சந்தோஷம். ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களின் பௌத்திரரான மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளால் வடமொழியில் "ஸ்ரீ தியாகராஜ விஜயம்" என்ற நூல் எழுதப்பட்டு அச்சிடப்பட்டுள்ளது. அது வடமொழியில் உள்ளதால் யாவரும் அதன் மூலம் சாஸ்திரிகள் அவர்களது வாழ்க்கை பற்றிய விவரங்களைப் புரிந்து கொள்வது இயலாது. அந்தக் குறையைப் போக்கும் வகையில் தக்க மேற்கோள்களுடன் தமிழில் விவரமாக இந்த நூல் வெளியிடப்படுவது போற்றத் தக்கதாகும்.

1923 முதல் 1928 வரை கும்பகோணம் கோவிந்த தீக்ஷிதர் வேதகாவ்ய பாடசாலையெனத் தற்சமயம் வழங்கப்பெறும் ராஜா பாடசாலையில் நான் வித்யாப்யாஸம் செய்து கொண்டு இருந்தபொழுது ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் வித்யா விசாரணைக் கர்த்தராக இருந்தார். அனத்யயனதினம் போன்ற விடுமுறை நாட்களில் என் போன்ற வித்யார்த்திகளை வீட்டுக்கு வரச் சொலி, நாங்கள் கற்ற விஷயங்களில் பரீக்ஷை செய்வார்கள். அது சமயம், ஸாஹித்யம் அலங்காரம் பற்றிய அபூர்வமான பல விஷயங்களை எங்களுக்கு உபதேசிப்பார்கள். அவர்களே சென்னை மயிலையிலுள்ள ஸம்ஸ்கருத கல்லூரியில் மஹாமஹோபாத்யாய கருங்குளம் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்த்ரிகள் அவர்களிடம் மேல் படிப்புக்காக என்னை அனுப்பி வைத்தார்கள்.

அது முடித்தவுடன் கருங்குளம் சாஸ்த்ரிகள் அவர்களே வேதாந்த வித்யாப்பியாஸம் செய்வதற்காகக் கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் நடந்து ந்த அப்புவையர் லக்ஷ்மி அம்மாள் வேதாந்த பாடசாலைக்கு அனுப்பி வைத்தார்கள். அந்தப் பாடசாலைக்கும் ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளே வித்யா விசாரணைக் கர்த்தராக இருந்து வந்தார்கள். அப்பொழுது வேதாந்த சாஸ்த்ரங்களின் பல ரஹஸ்யங்களையும் எங்களுக்கு உபதேசித்தார்கள். ஆகவே

நானும் ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்களின் குருசிஷ்ய பரம்பரையில் வரும் பாக்யம் பெற்றவனாக ஆகிறேன். ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் அவர்களின் மூத்த குமாரரான ஸ்ரீ ய. மஹாலிங்க சாஸ்த்ரிகள் சில வடமொழி நூல்களை இயற்றி அவற்றை முதன் முதலில் என்னைச் சரிபார்க்கச் சொல்வார்கள்.

தற்சமயம் இந்தத் தமிழ் நூலை வெளியிடும் ஸ்ரீ யக்ஞ ஸ்வாமி சாஸ்த்ரிகள் அவர்களின் நான்காவது குமாரரான ஸ்ரீய. ஸாம்பமூர்த்தி அவர்களையும் சிறுபிராயம் முதற்கொண்டே எனக்குத் தெரியும். நல்லமுறையில் இந்நூலை வெளியிடுவதற்கான முயற்சியெடுத்து இதை அச்சிட்டதற்காக அவர்களை நான் மிகவும் பாராட்டுகின்றேன். இதைப் படித்து அனைவரும் பயனடையவேண்டுமெனவும் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,
பாஷ்ய பாவக்ஞ
வரஹூர் கல்யாணஸுந்தர
சாஸ்த்ரிகள்

"சங்கரப்ரஸாத"
65/2, பஸுல்லா சாலை,
தி.நகர், சென்னை-600017.
28.05.1986

# அணிந்துரை

*யத்பாதாம்புஜஸேவநாத் ஜனிமதாம் பவ்யம் வரீவர்ததே*
*யத்காருண்யவசாச்ச மாத்ருஶஜநோ மந்தோபி முச்தோபவேத் |*
*ஶ்ரீமச்சம்பகதாநனஸ்திதிஜுஷாம் தேஷாம் பவாநீபதே:*
*அம்ஶாநாம் சரணௌ பஜாமி ஸததம் பக்த்யா குரூணாமஹம் ||*

என்று இன்றும் வேதாந்த சாந்தி பாட குரு பரம்பரா வந்தனத்தில் பிரம்மஸ்ரீ தியாகராஜ மகீ என்று பெயருள்ள மஹாமஹோபாத்யாய மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளின் வந்தன ச்லோகம் சொல்லப்பட்டு வருகிறது. பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் "நியாயபாஸ்கரம்" என்னும் த்வைதமத கிரந்த கண்டனமாக "நியாயேந்து சேகரம்" என்ற மிகச்சிறந்த அத்வைத கிரந்தம் இயற்றினார்கள். அதனுடைய முற்பகுதியை அன்னாருடைய பிரதம சிஷ்யரான மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ ஹரிஹர சாஸ்த்ரிகளவர்கள் வெளியிட்டுள்ளார்கள். இரண்டாவது பாகம் நமது பூர்வாச்ரம தந்தையார் ஸ்ரீலஸ்ரீ ஸோமசேகரேந்த்ர ஸ்வாமிகள் வசம் கைப்பிரதியாக இருந்து வந்தது அதை சுமார் 20 ஆண்டுகளுக்கு முன் காஞ்சி காமகோடிமடத்து அத்வைத சபா பத்திரிகையில் வெளியிடப்பட்டு வந்துள்ளது.

எங்கள் தீக்ஷிதமரபைச் சோந்த இன்றிலிருந்து முன் ஐந்தாவது தலைமுறையில் வாழ்ந்த ஸ்ரீ சந்த்ரசேகர தீக்ஷிதர் ராஜ மன்னார்குடி சென்று பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்களிடம் தர்ம சாஸ்த்ராப்யாஸம் சுமார் ஐந்து வருஷ காலம் அங்கேயே இருந்து பெற்று வந்தார்கள். அதன் பயனாக ஸ்ரீ சந்த்ர சேகர தீக்ஷிதர் அக்காலத்தில் தர்மசாஸ்த்ர விஷயத்தில் மிகவும் நிபுணராகவும், எல்லோருக்கும் உதவி செய்பவராகவும் வாழ்ந்து வந்தார். அவர் காலத்திய மஹாமஹோபாத்யாய சாஸ்தராசார்ய தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் அவர்களும் மேற்படி ஸ்ரீ சந்த்ரசேகர தீக்ஷிதர் அவர்களிடமே தர்ம சாஸ்த்ர விஷயமான சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெறுவார்.

மஹாமஹோபாத்யாய மன்னார்குடி பிரம்மஸ்ரீ ராஜூ சாஸ்த்ரிகளவர்களின் சரித்திரம் அவர்களது பௌத்திரர் மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளால் ஸம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்டு தியாகராஜ விஜயம் என்ற பெயரில் கும்பகோணம் ஸ்ரீவித்யா பிரஸ்ஸில் மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ ஹரிஹர சாஸ்த்ரிகளால் வெளியிடப்பட்டது. தற்பொழுது கிடைப்பது அரிதாகிவிட்டதாலும் ஸம்ஸ்க்ருத ஞானம் குறைந்துவிட்டதாலும், பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளின் குமாரர் ஸ்ரீமான்ய. ஸாம்பமூர்த்தி ஐயரவர்கள் தமிழில் வெளியிடுவது பற்றி மிக்க மகிழ்ச்சியடைகிறோம். பெரியோர்களுடைய சரித்திரத்தைப் படிப்பதே மிகவும் புண்யகரமான செயலாகும்.

72, தெற்கு வீதி,
சிதம்பரம் - 608001.
15.05.1986

சது:சாஸத்ர சிரோமணி, பண்டிதராஜ,
ஸோம. ஸேது தீக்ஷிதர்
ஸ்ரீ நடராஜர் கோயில் டிரஸ்டி.
சிவம்.

உ

ஸ்ரீ சிவாப்யாம் நம:

# அணிந்துரை

*அப்பய்ய தீக்ஷிதேந்த்ரான்*

*நீலகண்ட யதீம்ஸ்ததா |*

*த்யாகராஜ மகீந்த்ராப்ஸ்ச*

*நௌம்யஸ்மத்வம்ஸ ஸேகரான். ||*

அடையப்பலம் என்ற ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர் அவதரித்த ஸ்தலத்தில் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீஸ்ரீஸ்ரீ மாமுனிவரின் அவதார தினத்தை முன்னிட்டு 22.05.1986 முதல் ஸமக்ர ஸாமவேதபாராணயமும், ஸ்ரீ தேவீபாகவத யக்ஞமும் நடத்த காஞ்சி வந்து ஸ்ரீ பெரியவாள் ப்ரஸாதம் பெற்று வந்தேன். உடன் சிவஞான பூஜகர் ஆங்கீரஸ ஸ்ரீ வேங்கடேச சர்மாவை சந்திக்க நேர்ந்தது. ஸ்ரீ மன்னார்குடி பெரியவாள் சரிதம் தமிழ்மொழியில் அச்சாகிக் கொண்டிருப்பதாயும் பூர்த்தியடையும் தருணமாதலால் சிறிய கட்டுரை எழுதும்படியும் தெரிவித்தார். ஸ்ரீமத் தீக்ஷிதரவர்களுக்குச் செய்த சிறிய வைங்கர்யத்திற்கு கிடைத்த பயனாக நினைத்து எழுதுகிறேன்.

பிரம்மஸ்ரீ மன்னார்குடி பெரியவாள் சரித்திரத்தின் மூலம் நாம் கையாள வேண்டிய குணாதிசயங்கள் பற்பல அறிய கூடியவை உள்ளனவெனத் தெரிகிறது. ஆனால் அவர்கள் நமது மதத்துக்குச் செய்த அரிய பெரிய உபகாரம் தத்வத்தைவிளக்கும் நூல்களாகும். அவை நமது பார்வைக்கு உரியவை அறியும் திறமை வாய்ந்தவர்கள் அந்நூல்களை அவசியம் படிக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தில் சில நூல்களை பற்றி அறிவிக்கிறேன்.

1. ந்யாயேந்து சேகரம்:- ஹிந்து மத்திற்கு ஆதாரமான நூல் வேதம். அது பல விஷயங்களை வெளியிட்டாலும் அதன் உட்கருத்து "எங்கும் நிறைந்த பரம்பரம்மம் ஒன்று, அதுவே ஜீவனாக விளங்குகிறது, உலகம் தோற்றமே" என்பதாகும். இதுதான் அத்வைத சித்தாந்தம் எனப்படும். இது வேதஸாரமான

உபநிஷத்துக்களில் விளங்குகிறது. இதை வேத வியாஸர் பிரம்ம ஸூத்ரத்தில் மறை பொருளாகக் கூறியுள்ளார். இதன் விளக்கத்தை ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் தமது பாஷ்யம் மூலம் வெளியிட்டார்கள். அதில் சங்கை ஏற்படாமலிருக்க ஷட்தர்சினீ டீகாக்ருத் வாசஸ்பதிமிச்ரர் பாமதீ என்ற நூலையும், அமலானந்த ஸரஸ்வதீ கல்பதரு என்ற நூலையும், ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் பரிமளம் என்ற நூலையும் செய்து அத்வைதத்தை நிலை நாட்டினார்கள். பிறகு ஒரு சமயம் பண்டிதர் ஒருவர் நியாய (தர்க்க) சாஸ்திரங்களில் உள்ள யுக்திகளைக் கொண்டு வேதத்தின் கருத்து அத்வைத மல்ல என்று கூறும் ந்யாயபாஸ்கரம் என்ற நூலை இயற்றினார். அந்நூலில் உள்ள அரிய பெரிய யுக்திகளை அந்த நியாய சாஸ்திர முறைப்படியே கண்டனம் செய்து, அத்வைத சித்தாந்தமே உபநிடதங்களின் உட்கருத்து என்பதை விளக்கி நமது மன்னார்குடிப் பெரியவாள் இயற்றிய நூலே ந்யாயேந்து சேகரம் என்ற நூலாகும். இது அத்வைத சாஸ்த்ரத்தில் தலை சிறந்த நூல்.

2. ஸத்வித்யாவிலாஸம்:- இந்த நூல் உபநிபதங்களில் மிகப்பிரஸித்தமான "தத்வமஸி" என்ற வாக்யத்திற்கு அத்வைதமே பொருள் என்பதை ஸம்ஸ்க்ருத இலக்கண சாஸ்திரமான வியாகரணத்தைக் கொண்டு பற்பல ஆக்ஷேபங்களுக்கெல்லாம் பதில் கூறி, ஜீவபிரம்ம ஐக்யத்தை அசைக்க முடியாத நிலையில் ஸ்தாபித்தது.

3. ஸாமருத்ர பாஷ்யம்:- ஸாமவேத ருத்ரம் பதினோரு ஸாமாக்கள் கொண்டது. அதில் எட்டு ஸாமாக்கள் ஆர்ச்சிக கானம், மூன்று ஸ்தோப கானம், ஸ்தோப பதத்திற்கு நான்கு வேதங்களுக்கும் பாஷ்யம் செய்த ஸாயணாசார்யர் பாஷ்யம் செய்யவில்லை, பட்டசோபாகரர் பாஷ்யம் உள்ளது. நமது பெரியவாள் ஸாமருத்ர பாஷ்யத்தில் கீழ்ச் சொல்லியவர் கூட கூறாத விஷயங்களை ஒரு பதத்திற்கு அனேக தாதுக்களைக் கொண்டு பற்பல அர்த்தங்களை மிகப் பொருத்தமாக எழுதும் பொழுது பதஞ்சலியின் அவதாரமோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

4. சிவமஹிமகலிகாஸ்துதிவிரிவுரை:- ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் "சிவமஹிமகலிகாஸ்துதி" என்று ஓர் நூல் இயற்றியுள்ளார்கள். அது, "ஸோமன்" என்ற பரமேச்வரனையும், "ஸோமம்" என்ற யாகத்தையும் ஒரே சொல்லால் பிணைத்து பல மீமாம்ஸா நியாயங்களைக் கோர்த்து மீமாம்ஸா சாஸ்திரம் நன்கு பயின்றவர்களும், யாகங்களைச் செய்விக்கும் திறமை உள்ளவர்களுமே புரிந்து கொள்ளும் நிலையில் அமைந்தது. அந்த நூலுக்கு நமது சாஸ்த்ரிகளவர்கள் விரிவுரை எழுதியுள்ளார்கள். அதைப் பார்ப்பவர்கள் ஜைமினி மஹரிஷியே பிறந்து எழுதினார் என்று கூறும் வகையில் அமைந்துள்ளது அந்நூல்.

5. தியாகராஜஸ்தவம்:- திருவாரூர் தியாகராஜப் பெருமானைத் துதிக்கும் வகையில் இந்த நூல் அமைந்துள்ளது. இதில் ஸாஹித்ய சாஸ்த்ர வல்லமையை அளவு கடந்த நிலையில் சாஸ்த்ரிகள் அமைத்துள்ளார்கள்.

இவ்விதம் நான்கு சாஸ்திரங்களிலும் நிகரற்ற பாண்டித்யம் ஒருவரிடம் அமைய வேண்டுமானால் அவர் தெய்வாம்சம் பொருந்தியவராகத்தான் இருக்க வேண்டுமென்பது கூறாமலேயே விளங்கும். எல்லாவற்றுக்கும் மேலாக ஆசார அனுஷ்டானங்களுக்கு ஆதர்ச புருஷராக விளங்கியவர் என்பது மிக மிக் கொண்டாடத் தகுந்தது. மேலும் அவர்கள் இயற்றிய கிரந்தங்கள் பதினெட்டு காணப்படுகிறதென்பதை ஸாமருத்ர பாஷ்ய புஸ்ரீமிகையில் எழுதியுள்ளேன்.

பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளவர்கள் பரிச்சயம் 1924ம் வருஷம் முதல் ஏற்பட்டது. என்னிடம் ஹ்ருதய பூர்வமான ப்ரீதியுடன் பல உபதேசங்களைச் செய்துள்ளனர். அதில் முக்கியமானது ஜம்புகேச்வரத்தில் ஜகத்குரு வித்யாஸ்தானத்தில் ஸ்ரீமான் போலகம் ஸ்ரீராம சாஸ்த்ரிகள் அவர்களிடம் எட்டு வருஷ காலம் வேதாந்த, தர்க்க சாஸ்திரம் பயின்று, யூனிவர்ஸிடி பரீக்ஷையான சிரோமணியில் தேர்ச்சி பெற்றுப் புறப்படும் சமயம், "நமது தீக்ஷித க்ரந்தங்களில் நியாய ரக்ஷாமணி, பரிமளம் இவ்விரண்டையும் நன்கு வாசித்து விட்டுப் புறப்படு, நல்ல குருவை அடைந்திருக்கிறாய்" என்று உபதெசித்தது

மிகச்சிரேஷ்டமானது, அவ்விதமே படித்து, கும்பகோணம் அத்வைத ஸபையில் இரு க்ரந்தங்களையும் பரீக்ஷை கொடுக்கும் பாக்யமும் அதன் வாயிலாகத் தற்காலம் அச்சபையில் பரீக்ஷாதிகாரியாயுமிருக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அதனால் அவர்களை என்றும் மறக்க முடியாது.

இந்நூலை முறையே ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதியுள்ள ஸ்ரீமான்கள் Y.மஹாலிங்க சாஸ்த்ரிகளும், Y.ஸாம்பமூர்த்தி சாஸ்த்ரிகளும் எனது மிக நண்பர்கள். அவர்கள் தீக்ஷிதரவர்களிடமிருந்து பன்னிரண்டாவது தலைமுறை என்பதைக் குறிப்பிட்டுள்ளனர். அது போல நானும் பன்னிரண்டாவது தலைமுறை என்பதை இந்நூலுக்கு பொருத்தமாகத் தெரிவிக்கிறேன். இதன் விவரத்தை ஸாமருத்ர பாஷ்ய பூமிகையில் நன்கு காணலாம். இவ்விதம் சிறிதளவு எழுத வாய்ப்பளித்த ஸ்ரீமான் ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்களுக்கு ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், மேலும் இது போன்ற அரிய நூல்களை வெளியிடும் தைரியம் இவற்றை அளிக்குமாறு பராசக்தியைப் பிரார்த்திக்கிறேன்.

**M. ராமநாத தீக்ஷிதர்**
(மாயூரம்)

11, நைனியப்பன் தெரு,
சென்னை-600028.

உ

# பதிப்புரை

1961ம் ஆண்டு ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா என்ற அமைப்பினை நிறுவி அதன் மூலம் ஆண்டுதோறும் ஸ்ரீ சங்கர ஜயந்தி விழாவும் மற்றும் பகவத்பாத கிரந்த பிரசாரமும் செய்து வந்த எனக்கு 1965-ம் ஆண்டில் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரைப் பற்றி அறியும் வாய்ப்பு கிடைத்தது. அதன்பின்னர் ஆண்டு தோறும் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் ஜயந்தி கொண்டாடி வரும் போது அவரது தம்பி பேரர் ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதரைப் பற்றியும், தீக்ஷித வம்சத்தில் 9வது தலைமுறையினரான மன்னார்குடிப் பெரியவாள் பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் அவர்களைப் பற்றியும் தெரிந்து கொண்டேன். ஸ்ரீமத் தீக்ஷிதர் சரிதத்தைத் தனி நூலாகவும் ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதர் சரித்திரத்தை 1982-83 ஆண்டு ஸ்ரீ சங்கர ஜயந்தி மலாலும் பிரசரித்தேன். மன்னார்குடிப் பெரியவாளின் சரித்திரத்தையும் பிரசுரிக்கப் பெரும் அவர்க் கொண்டிருந்த போது அவர்களது கொள்ளுப் பேரர் ஸ்ரீமான் ய. சாம்பமூர்த்தி அவர்களே இச்சரிதம் எழுததத்தக்கவர் என்று அவரையணுகினேன். அவரும் மகிழ்ச்சியுடன் உடன்பட்டார் எனினும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா என்ற மூதுரைப்படி இப்பொழுது தான் நிறைவுறும் காலம் ஏற்பட்டது.

இந்த நூலைப் பற்றிய விவரங்கள் யாவும் முன்னுரைப் பகுதிகளில் விரிவாகக் கூறப்பட்டுள்ளபடியால் மீண்டும் இங்குக் குறிப்பிடவில்லை. ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்களிடம் எனக்குள்ள எல்லையற்ற பகதியானது அவர்களது வம்சத்தாரிடமும் எனக்கு பக்தியையும் பெருமதிப்பையும் ஊட்டி, இந்த நூலைப்பிரசுரிக்கும் பணியில் என்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளச் செய்தது. ஸ்ரீமான் ய.சாம்பமூர்த்தி அவர்கள் இந்த நூலுக்குரிய விஷயத்தை அவரது தமையனாரது ஆங்கில நூலிலுருந்து மொழி பெயர்த்தார் என்று கூறினாலும், ஆங்கில நூலையும் படித்த எனக்கு, இது வெறும் மொழி பெயர்ப்பாக மட்டும் இல்லாமல் மூல நூலை இனிது

விளக்கும்படியாகவும் அமைந்துள்ளது நன்கு புலனாயிற்று. இது போன்ற வரலாற்று நூல்களை எழுத ஸ்ரீமான் ய.சாம்பமூர்த்தி அவர்கள் முற்றிலும் தகுதியும், திறமையும் உடையவர் என்பதையும் இந்த நூல் தெளிவாக்குகிறது.

தனது கொள்ளுத் தாத்தாவிடம் இருந்த பக்தி விசேஷத்தால் அவர்களது சரித்திரம் பரவ வேண்டுமென்ற ஆர்வத்துடன் இந்த நூலுக்குரிய விஷயத்தை அளித்ததுடன் நில்லாமல், இதற்காகும் பொருட் செலவையும் அவரது நெருங்கிய உறவினர்களும் அவருமாக் சேர்ந்து ஏற்றுக் கொண்டார்கள். இத்தகு பெருங்கொடைக்கு அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைச் செலுத்துகிறேன். ஸ்ரீமுகம் அனுக்கிரஹித்த ஸ்ரீமத் ஜகத்குரு அவர்களுக்கு எனது வணக்கங்களையும், முன்னுரையளித்த பெரியோர்களுக்கும் எனது வணக்கத்துடன் கூடிய நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீமான் ய.சாம்பமூர்த்தி அவர்கள் சமய, சமூகப் பணிகளில் தம்மை ஈடுபடுத்தித் தன்னலம் கருதாது சேவை செய்து வருவது மிகவும் போற்றத்தக்கது. அவரது இதர விருப்பங்களான (அவரது முன்னுரையில் குறிப்பிட்டபடி) பிரசுரங்களும் விரைவில் வெளி வந்து அவரது மனோபீஷ்டம் பூர்த்தியாகுமாறு பார்வதீ பரமேசுவரர்களைப் பிரார்த்திக்கிறேன்.

5, டெலிபோஸ்டு காலனி,
குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-33.
11.06.1986

இங்ஙனம்,
சிவபுராண ஞான பூஜகர்
ஆங்கீரஸ **S. வேங்கடேச சர்மா**
(சங்கரனடிமை)
பதிப்பாசிரியர்

சிவம்

உ

ஸ்ரீ மார்க்கஸஹாய ஸ்வாமினே நம:

மஹாமஹோபாத்யாய, பிரம்மஸ்ரீ

# மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள்

திவ்ய சரித ஸங்க்ரஹம்

## முதல் அத்தியாயம்

## தோற்றமும், கல்விப் பயிற்சியும்

उभौ तौ विश्रुतौ लोके स यथा शम्भुरीश्वरः ।
दीक्षिता अप्पयज्वानः शास्त्रिणो राजुशास्त्रिणः ।।

**உபௌ[1] தௌ விஶ்ருதௌ லோகே ஸ யதா[2] ஶம்பு[4] ரீஶ்வர:**
**தீ[3]க்ஷிதா அப்ப யஜ்வான: ஶாஸ்த்ரிணோ ராஜு ஶாஸ்த்ரிண:**

ஈச்வரன் என்ற சொல் எப்படி பரமசிவனையே குறிப்பதாகக் கொள்கிறோமோ அதேபோல் தீக்ஷிதர் என்ற சொல் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்களைத்தான் குறிப்பதும், "சாஸ்த்ரிகள்" என்ற மாத்திரத்தில் மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள் அவர்கள்தான் நம் நினைவுக்கு வருவதும் லோகப் பிரஸித்தம்.

பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள சம்பகாரண்ய க்ஷேத்திரமாகிய மன்னார்குடியில் கி.பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் தனது அதிசயக்கத்தக்க புனித வாழ்க்கையாலும் தன்னிகர் அற்ற வித்வத்தாலும் பிரகாசித்து வந்தார்கள். மகான் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் வம்சத்தில் ஒன்பதாவது நேர் தலைமுறையினராகிய ஸ்ரீ சாஸ்த்ரிகள் கி.பி. 1815 மே மாதம் 28ம் தேதி ஞாயிற்றுக்கிழமை (யுவ வருஷம் வைகாசி மாதம் 17ம் தேதி) திருவோண நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் அவதரித்தார்கள். அன்னாரது தந்தை, பாட்டனார் முதலியோர் திருவாரூருக்குச் சமீபத்திலுள்ள கூத்தம்பாடி என்ற கிராமத்தில்

வசித்து வந்தார்கள். வடஆற்காடு ஜில்லாவில் ஆரணிக்குப் பக்கத்தில் உள்ள அடையப்பலம் என்ற கிராமத்தையே பூர்வீகமாக் கொண்ட இம்முன்னோர்கள் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் மேற்சொன்ன கூத்தம்பாடிகிராமத்தை மான்யமாகப் பெற்று அங்கு வந்து குடியேறியவர்கள் எனத் தெரிகிறது.

பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் ஸாம வேதத்தை லஹ்ஷணங்கள் உள்பட தனது பாட்டனார் ஸ்ரீ தியாகராஜ தீக்ஷிதரிடம் நியமாத்யயனமாகக் கற்று முடித்து, தனது தகப்பனார் ஸ்ரீ மார்க்கஸஹாய வேங்கட ஸுப்ரமணிய தீக்ஷிதரிடம் காவ்ய நாடகங்களைக் கற்றுத் தேர்ந்தார். தனது பதினைந்தாவது வயதிலேயே ஸம்ஸ்க்ருதத்தில் நன்கு ஸம்பாஷிக்கவும் அழகான கவிதைகள் புனையவும் ஆரம்பித்திருந்தார். தனது மேல் படிப்புக்காக மன்னார்குடி சென்று தனக்கு முதல் ஆசார்யராக அமைந்த ஸ்ரீ நாராயண ஸரஸ்வதி அவர்களிடம் அணுகும் போது தனது குலதெய்வமான ஸ்ரீ மார்க்கஸ ஹாயேச்வரரை மானஸிகமாகக் கீழ்கண்ட சுலோகத்தால் வேண்டிக் கொண்டார்.

मरकतवल्ली सहचरममरतरुं कमपि सुलभमानमताम् ।
मार्गसहायाभिख्य कुलदैवंतमाश्रयामि सुरमुख्यम् ।।

மரகதவல்லீ ஸஹசரமமர தரும்
கமபி ஸுலப$^{4}$ மானமதாம்
மார்க$^{3}$ ஸிஹாயாபி$^{4}$ க்$^{2}$ய குலதை$^{3}$ வத-
மாம்ரயாமி ஸுரமுக்$^{2}$யம்

"தெய்வங்களுள் உத்க்ருஷ்டமான வரும் மார்க்கஸஹாய ரென்று அழைக்கப்படுபவரும், எப்பொழுதும் மரகதவல்லி என்ற பச்சைக்கொடியுடன் (தேவியுடன்) இணைந்த தேவலோகத்து விருக்ஷமாக இருந்தும் தன்னை வணங்குபவருக்கு ஸௌலப்யமாக எவர் கிட்டுகிறாரோ அப்படிப்பட்ட, எந்தன்

முன்னோர்கள் வழிபட்ட, குலதெய்வத்தை அடைக்கலம் புகுகிறேன்.

மன்னார்குடியில் தனது தாய் மாமன் வீட்டில் தங்கிக் கொண்டு ஸ்ரீ கோபாலாசாரியார் அவர்களிடம் சில வருடங்கள் தர்க்கம், வ்யாகரண சாஸ்திரங்களை அப்யஸித்து மேற்படி சாஸ்திரங்களில் த்ருடமான பாண்டித்யத்தை ஸம்பாதித்துக் கொண்டார். இருபது வயது கூட ஆகாத நிலையில், இன்னும் வித்யார்த்தியாக இருக்கும்பொழுதே, இந்த சாஸ்திரங்களில் நடந்த வாதங்களில் முதிர்ந்த பண்டிதர்களுகெல்லாம் ஈடு கொடுத்து ஒவ்வொரு சமயமும் வெற்றிவாகை சூடி வந்த அவரது புகழ் வளர்ந்து வந்தது.

முதன் முதலாக ஸ்ரீ நாராயண ஸரஸ்வதி அவர்களிடம் சரஸ்த்ரிகளுக்கு வேதாந்த பாடங்கள் தொடங்கியது. பின்னர் தனது குருவுக்கு குருவான ஸ்ரீ ஸ்வயம்பிரகாசயதிகளிடமே தொடர்ந்தது. மஹாபாஷ்யம் படிப்பதற்கு தனது வம்சத்தை சேர்ந்த மேலக்காவேரி சின்னண்ணா தீக்ஷிதரும் மீமாம்ஸா படிப்பதற்கு கும்பகோணம் ரகுநாத சாஸ்த்ரிகளும் குருவாக அமைந்தார்கள். மீமாம்ஸா பாடங்கள் தொடங்கி ஒரு வருட காலமே ஆகியிருந்த பொழுத, சில குடும்ப நிர்ப்பந்தத்தால் ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் மன்னார்குடி திரும்ப வேண்டியிருந்தது. அது சமயம் அதிக வருத்தத்துடன் குருவிடம் உத்தரவு கேட்டபோது ஸ்ரீ ரகுநாத சாஸ்த்ரிகள் கீழ்கண்ட சுலோகத்தைச் சொல்லி ஆசீர்வதித்து அனுப்பினார்கள்.

स्वयं द्रष्टुं शक्या भवति निखिलग्रंथविततिः
मनीषानैर्मल्यान्मखिवरकृपातश्च भवताम् ।
गुरुः पाठश्चिवन्तेत्यखिलमपि लोकानुकरणं
ततो गत्वा ग्रामं विरचयत विद्यावितरणम् ।।

ஸ்வயம் த்$^{3}$ரஷ்டும் ஶக்யா ப$^{4}$வதி நிகி$^{2}$ல க்$^{3}$ரந்த$^{2}$ விததி:
மநீஷாநைர்மல்யான்மகி$^{2}$வர க்ருபாதஶ்ச ப$^{4}$வதாம்
கு$^{3}$ரு: பாட$^{2}$: சிந்தேத்யகி$^{2}$லமபி லோகாநு கரணம்
ததோ க$^{3}$த்வா க்$^{3}$ராமம் விரசயத வித்$^{3}$யா விதரணம் ||

"உனது புத்தி தீக்ஷண்யத்தாலும், மஹானாகிய உனது முன்னோரான தீக்ஷிதேந்திரர்களின் அருளாலும் நீ தானாகவே உத்கர்ஷமான க்ரந்தங்களைப் படித்து க்ரஹித்துக் கொள்ளலாம். உன்னுடைய விஷயத்தில், ஒரு குரு, பாடம் கேட்டல், புன:படனம் முதலியனவெல்லாம் ஒரு பழைய ஸம்ப்ரதாயத்துக்காவே தவிர, அவச்யம் இல்லாதவை. ஆகையால் நீ திருப்தியாக உனது கிராமத்திற்குத் திரும்பி,உனது பாண்டித்யத்தைப் பிறருக்கு உபதேசிப்பாயாக."

அவருடைய மற்ற குருமார்களும் இதே போல் சாஸ்த்ரிகளிடத்தில் தங்களுக்குள்ள பெருமதிப்பை வெளிப்படுத்தி வந்தனர். ஸ்ரீ கோபாலாசார்யர் அவர்கள் பதினெட்டு வயதேயாகியிருந்த தனது இளம் மாணவனை மரியாதை மிகுந்த "சாஸ்த்ரி" என்ற பட்டப்பெயரால் தான் அழைப்பது வழக்கம். யதீந்திரர் நாராயண ஸரஸ்வதி அவர்களோ தன்னிடம் பாடம் கேட்டு வந்த ஸந்யாசி சிஷ்யர்கள் தங்கள் ஸஹமாணவனான சாஸ்த்ரிகளைப் பொறாமைக் கண்களோடு நோக்குவதைக் கவனித்து, இந்தப் பொருத்தமில்லாத பொச்சரிப்பை விட்டொழியுங்கள். சாஸ்த்ரிகள் ஒரு அவதார விசேஷம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள் என்று கட்டளையிடுவாராம். மேலக்காவேரி சின்னண்ணா தீக்ஷிதரோவென்றால் தனது வம்சத்தைச் சேர்ந்த மாணாக்கனின் அதிசயிக்கத்தக்க புத்தி விசேஷத்தினால் மிகவும கவரப்பட்டவராக, ஒரு தினம் சாஸ்த்ரிகளை மஹாபாஷ்யத்தில் தற்போது நடந்து கொண்டிருக்கும் பாலடத்திற்கு வெகு தூரம் பின்னால் வரப்போகும் ஒரு பகுதியை யதேச்சையாக எடுத்துக் கொடுத்து அதை விளக்குமாறு கூற, சாஸ்த்ரிகளும் அப்படியே தங்கு தடையின்றி வியாக்கியானம்

செய்து தனக்கு அந்த இடம் நன்றாகவே விளங்கியுள்ளது என்பதை நிரூபித்தார். இந்தப் பரீக்ஷைக்குப் பிறகு மிகவும் தள்ளாத வயதிலிருந்த குருவானவர், அடிக்கடி குடும்பக் கார்யங்களுக்கு வீட்டுக்குப் போய்வர வேண்டியிருந்த மாணவனை "நீ என்னிடம் இவ்வளவு படித்ததே போதும். வேறு ஆசானிடமிருந்து இனி புதிதாக அறிந்து கொள்ள வேண்டியது யாதும் இல்லை என்பது என் த்ருடமான எண்ணம்" என்று ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார். மஹாகவி காளிதாஸன் பார்வதியின் வித்யாப்யாஸத்தைக் குறிப்பிட்டது போல், தான் முற்பிறவியில் அப்யஸித்திருந்த வித்யையெல்லாம் தக்க வயதில் சாஸ்த்ரிகளிடம் தானாகவே வந்தடைந்தன என்று சொல்லுவது தான் பொருத்தமாக இருக்கும்.

तां हंसमाला शरदीव गङ्गां महौषधीर्नक्तमिवात्मभासः ।

स्थिरोपदेशादुपदेशकाले प्रपेदिरे प्राक्तनजन्मविद्याः ।।

தாம் ஹம்ஸமாலா ஶரதீ³வ க³ங்கா³ம்
மஹௌஷதீ⁴ர்நக்தமிவாத்மபா⁴ஸ:
ஸ்தி²ரோபதே³ஶாது³பதே³ஶகாலே
ப்ரபேதி³ரே ப்ராக்தன ஜன்மவித்³யா:

"அன்னப் பக்ஷிகளின் கூட்டம் எப்படி சரத் காலத்தில் நியதமாக கங்கையை வந்தடையுமோ, எப்படி மூலிகைகளுக் குண்டான ஸ்வபாவிகமான வெளிச்சம் இரவு நேரத்தில் தவறாது திரும்பவும் தோன்றுமோ அவ்விதமே அவள் முற்பிறவியில் ஸம்பாதித்திருந்த கல்வி அவ்வளவும் கேட்கும் பாடங்களைத் த்ருடமாக க்ரஹிக்கும் அவளை வந்துமறுபடியும் அடைந்தன".

## இரண்டாவது அத்தியாயம்

## மன்னார்குடியில் ஒரு உபதேசகராக

பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்கள் தனது இருபத்தி நான்காவது வயதிலேயே ஸகல சாஸ்திரங்களிலும் பாரங்கதர் ஆனார்கள். மன்னார்குடியிலுள்ள பிரதானமான நகர வாசிககளால் அவ்வூரில் அமைத்துக் கொடுப்பப்பட்ட வீட்டில் கிருஹஸ்தாச்ரமத்தை அவலம்பித்து வசிக்கத் தொடங்கினார்கள். அது முதல் சிஷ்ய பரம்பரைகளுக்கு உபதேசம் செய்வதில் தன்னை முழுமனதுடன் அர்ப்பணித்துக் கொண்டார்கள். தவிர மஹரிஷிகளால் விதிக்கப்பட்ட வாழ்க்கை முறைகளைத் தீவரமாக அனுஷ்டானம் செய்வதன் மூலம் தனது அத்யாத்மிக உய்வுக்கும் வழி தேடிக் கொண்டார்கள். மேலும் சாஸ்த்ரிகள் அவர்கள் மோக்ஷஸாதகமானதும், பரிசுத்தமான உள்ளும் புறமும், மனமும் காயமுடன் கூடிய இம்மாதிரியான நிர்மலமானதும் பவித்ரமானதுமான தனது வாழ்க்கை நெறியை தனது முதிர்ந்த வயது வரை வெகு காலம் விடாமலும் சிரத்தையாகவும் அனுஷ்டித்து வந்தார்கள். அன்னாருடைய எந்தக் கார்யமோ, நடவடிக்கையோ வேத, சாஸ்த்ர ஸம்மதமாகவே இருந்ததுடன் தனது ஆத்ம சுத்திக்கு வழி அமைக்க சாதனமாகவும்தான் அமைந்திருந்தது. வித்தையை அதற்காகவே தேடிக் கொள்ள வேண்டும். மனிதன் மேலான நிலையடைவதற்கு ஒரு அப்யாஸம்தான் வாழ்க்கை என்பது. பிறருக்குப் பாடம் சொல்லி அதாவது வித்யாதானம் செய்து வித்தையைப் பலரிடம் பரப்புவது, க்ரந்தங்கள், சாஸ்த்ரங்கள் இவற்றைப் பற்றி விவேசனம் செய்வது, ஸ்வயம் கவனம் செய்வது முதலியன தலைமுறை தலைமுறையாகத் தனது வம்சத்தாரால் அனுஷ்டிக்கப்பட்டு வாரிசுகளிடம் ஒப்படைக்கப்பட்டதும், மீற முடியாததுமான தர்மம், கடமை, பொறுப்பு என்று நம்பி இருந்தார்கள்.

குருகுலவாஸம் முடிந்த பிறகு ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்கள் நித்யான்ஹிகங்கள் செய்தது போக மற்ற நேரத்தையெல்லாம், மனுஸ்மிருதி, யாக்ஞுவல்க்ய ஸ்ம்ருதி முதலிய கிரந்தங்களை மிகுந்த பயபக்தியுடன் ஆழ்ந்த பரிசீலனை செய்வதிலேயே ஈடுபட்டிருந்தார்கள். இக்காலத்தில் அவர் ஆராய்ந்து வந்த மற்ற கிரந்தங்களாவன:-

பராசர ஸ்ம்ருதி, மாதவீய ஸ்ம்ருதி, வைத்தியநாத தீக்ஷிதீயம், பல சாஸ்திர சாகைகளில் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திராள் அருளிச்செய்த கிரந்தங்கள், ஸ்ரீ வேதாந்ததேசிகரின் கிரந்தங்கள், தத்வ முக்த கல்பா மேலும் பல.

அவர்களுடைய கல்வி-ஞானப்பசி மதசம்பந்தமானதோ வேதாந்தபரமான படிப்பிலோ மட்டும் நின்று விடவில்லை. இன்னும் இளவயதிலிருந்தே ஸ்ரீமத் ராமாயணத்திலும், ஸ்ரீ மஹாபாரதத்திலும் ஸ்ரீமத் பாகவதத்திலும் அதேபோல் ஸூத ஸம்ஹிதையிலும், மேலும் பிரஸித்தமானசில புராணங்களிலும் ஸ்ரீ சாஸ்த்ரிகள் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்கள். தவிர பிருஹத் ஜாதகம், காலாம்ருதம் போன்ற ஜோதிஷக் கிரந்தங்களிலும், காவ்ய சாஸ்த்ர விஷயங்கள் அடங்கிய காவ்யப்ரகாசம், காவ்யதர்ப்பணம் முதலிய கிரந்தங்களிலும் மிக்க ஆர்வம் காட்டினார்கள்.

ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களது தினசர்யையை நாம் சுருக்கமாக இங்கு பார்த்தோமானால் அதுவே தனக்கு விதிக்கப்பட்ட நியமங்களை சரிவர அனுஷ்டிக்கும் ஒரு உண்மையான பிராமணனுக்கு முன் உதாரணமாக இருக்கும்.

சாஸ்த்ரிகள் அவர்கள் தினந்தோறும் அதிகாலை மூன்று மணிக்குப் படுக்கையிலிருந்து எழுந்து தனது சிஷ்யர்கள் பின் தொடர குளத்திற்கு ஸ்நானத்திற்குச் செல்வார்கள். ஸ்நானம், நித்ய வந்தனங்கள், த்யானம் முதலியவற்றை முடித்துக் கொண்டு பலபலவென்று விடியும் வேளையில் வீடு திரும்புவார்கள். வீதியில் கையில் தீர்த்தபாத்திரத்துடன் வேத மந்திரங்களைச் சொல்லிக்

கொண்டு சாஸ்த்ரிகள் வருகிற சமயம் வாசற்திண்ணைகளில் படுத்துறங்கும் தெருவாசிகள் பெரியவாளிடம் இருந்த மரியாதை காரணமாக வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்து கண்ணில் படாமல் மறைந்து கொள்வார்கள்.

வீட்டிற்கு வந்தவுடன் அக்னி ஸந்தானம் செய்து முடிப்பார். உடனே தொடர்ந்து குறிப்பிட்ட பிராாத்தனைகள், ஸ்தோத்ரங்கள் சொல்லுவது, ஜபங்கள் செய்வது முதலிய கார்யக்கிரமங்கள் முடிய சுமார் இரண்டு மணி நேரம் ஆகிவிடும். இந்த தினசர்யையில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியைக் குறித்துச் செய்யும் த்யானத்தில் விசேஷ ச்ரத்தையுள்ளவராகவும், அதே போல் தனது குருவான ஸ்ரீ நாராயணானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் உபதேசித்தருளிய ஸ்ரீ ஸந்தான கோபால மந்த்ரஜபம் செய்வதிலும் மிகுந்த ஆஸக்தியுடன் இருந்தார்கள். காலை சுமார் எட்டு மணிக்கு வேதாந்தம் அப்யஸிக்கும் சிஷ்யர்கள் கூடிவிடுவார்கள். பாடம் பதினோரு மணி வரை நீடிக்கும். அடுத்து மாத்யான்ஹிகம், சிவபூஜை, வைச்வதேவம் நடக்கும். பிறகு போஜனம். போஜனத்தில் அவர்களுடனேயே தங்கியிருக்கும் சிஷ்யர்கள் கலந்து கொள்வதோடு விருந்தாளிகளும் இருப்பார்கள். ஆகாரத்திற்குப் பிறகு சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டுவிட்டு, பிற்பகலில் கக்ஷிகக்ஷியாக மாணாக்கர்களுக்கு, தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸா, அலங்காரம் ஆகிய பாடங்கள் அடுத்தடுத்து நடக்கும். தர்ம சாஸ்த்ரங்களில் தங்களுக்குண்டாகும் சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்வதற்கும் தங்கள் சொந்த விஷயங்களை விக்ஞாபித்துப் பெரியவாளின் ஆசீர்வாதத்தையோ (உத்தரவையோ) பெறுவதற்காகவும் ஒவ்வொரு நாளும் அனேகம் பேர் பாடங்கள் முடிவதற்காக வாசலில் காத்துக் கொண்டிருப்பது வழக்கம். அவர்களைச் சந்தித்து முடித்து விட்டு, சூர்யாஸ்தமன வேளையில் ஸந்த்யாவந்தனம் செய்வதற்காக சிஷ்யர்களுடன் குளத்திற்குச் செல்வார்கள். ஸந்த்யாவந்தனம், பிரார்த்தனை முதலியவைகளை முடித்துக் கொண்டு அருகாமையிலிருக்கும்

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேச்வரர் ஆலயத்திற்கு தரிசனம் செய்யச் செல்வார்கள். வீடு திரும்பியவுடன் ஔபாஸனம் செய்வார்கள். ஒவ்வொரு நாளும் அந்தந்த வேளைகளில் அவர்கள் முறையாக மனனம் செய்த தோத்திரங்கள் பல. அவைகளின் விவரங்களை இங்குக் கூறுவது இயலாது. மாலை வைச்வதேவத்தை முடித்துக் கொண்டு இரவு சாப்பிடுவார்கள். இரவுச் சாப்பாடு மிகவும் எளிமையாக இருக்கும். இன்னும் சில பிரார்த்தனைகள் செய்துவிட்டு நித்திரைக்குச் செல்வார்கள். படுக்கைக்குப் பக்கத்தில் எப்பொழுதும் பனை ஓலைகளும் ஒரு எழுத்தாணியும் தயாராக வைக்கப்பட்டிருக்கும். இரவில் ஏதாவது புதிய எண்ணம் அல்லது கற்பனை தோன்றினாலும் அல்லது சாஸ்த்ர சம்பந்தமான சந்தேகத்திற்கு விளக்கம் உதயமானாலும் உடனேயே சந்திர வெளிச்சத்தில் ஓலையில் எழுதிவிடுவார்கள்.

அவகாசம் கிடைத்த தினங்களில் பிற்பகலில் மஹாபாரதத்தைப் படிக்கச் சொலிக் கேட்பார்கள். கர்நாடக ஸங்கீதத்தில் ருசி, பரிச்சயம், நல்ல சாரீரம் இவையுள்ள சிஷ்யன் அப்பாஸாமி சாஸ்த்ரி என்பவர் தான் மஹாபாரத மூலம் படிப்பது வழக்கம்.

பிற்காலத்தில் அதாவது சாஸ்த்ரிகள் ஸோம யாகம் செய்து முடித்தபின் தினசர்யையில் அக்னிஹோத்ரமும் மற்றும் ஆஹிதாக்னிகளுக்கு விதிக்கப்பட்ட மற்ற நியமானுஷ்டானங்களும் சேர்ந்து கொண்டன. அறுபது வருஷத்திற்குக் குறையாமல் இதேபடி கொஞ்சமும் கால நேர வேறுபாடு இல்லாமலும் சாஸ்த்ரோக்த விதிகளுக்கு பங்கமேதும் ஏற்படாமலும் நித்யான்ஹிகங்களை சாஸ்த்ரிகள் மிகக் கவனமாகக் கடைப்பிடித்து வந்தார்கள்.

சாஸ்த்ரிகளைத் தேடி சிஷ்யர்கள் வெகு தூரத்திலிருந்தும் பல இடங்களிலிருந்தும் வந்து கூடினார்கள். சாஸ்த்ரிகளின் வயோதிக காலத்தில் அவரைத் தரிசித்துப் போகவென்றே ஜனங்கள் வருவது வழக்கமாயிற்று. தீர்த்த யாத்திரைகளில்

தரிசிக்க வேண்டிய புண்ய புருஷராக ஜனங்களால் சாஸ்த்ரிகள் மதிக்கப்பட்டார் என்றால் அது மிகையாகாது. முற்றி வரும் கலியின் இன்னல்களைத் தடுப்பதற்கும், வாழ்க்கையின் உன்னதமான லக்ஷியங்களை உடும்புப் பிடியாகக் கடைபிடிக்க வேண்டிய விதிமுறைகளைக் காட்டும் (மார்க்கதரிசி) கலங்கரை விளக்காகத் திகழ்வதற்கும் தயாளுவான ஈச்வரனால் பரம கருணையுடன் இவ்வுலகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்ட ஒரு வசிஷ்டரோ அல்லது வாமதேவரோ தான் நமது சாஸ்த்ரிகள் என்று ஜனங்கள் கருதினார்கள். சாஸ்த்ரிகளிடம் கொஞ்சம் நெருக்கமான பரிச்சயம் கொண்ட அதிர்ஷ்டசாலிகள் மஹாகவி காளிதாஸன் உருவப்படுத்திக் காட்டிய கண்வ மஹரிஷியுடன் சாஸ்த்ரிகளை ஒப்பிட்டுப் பார்க்காமல் இருந்ததில்லை.

## மூன்றாவது அத்தியாயம்

## பிதாவும், புத்திரனும்

சாஸ்த்ரிகளின் தகப்பனார் அப்பா தீக்ஷிதர் என்ற மார்க்க ஸஹாய தீக்ஷிதர் ஒரு வரகவி. தினசரி நடப்பை நாட்குறிப்பாகக் கவிதை வடிவில் எழுதி வைப்பது அவர் வழக்கம் அவர் தனது நாட்குறிப்புகளில் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் தனது புத்திரனைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கும் இரண்டு சுலோகங்களை இங்கு எடுத்துக் காட்டுவது பொருந்தமாகும்.

आद्यः शान्तगुणः सदाजपपरो वेदान्तसारार्थवित्
संयक् शास्त्र चतुष्टयेऽप्यविरतं कर्मन्दिविद्यार्थिनाम् ।
नित्यं पाठयितासदा परशिवध्यानार्चनासक्तधीः
रुद्राक्षावलिभस्मभूषिततनुः पित्रादिहृन्मोदकृत् ।।

ஆத்3ய: மாந்தகு3ண: ஸதா3 ஜபபரோ
வேதா3ந்த ஸாரார்த்2த வித்
ஸம்யக் மாஸ்த்ரசதுஷ்டயேபி அவிரதம்
கர்மந்தி3 வித்3யார்தி2னாம் |
நித்யம் பாட2யிதா ஸதா3 பரமிவ-
த்4யானர்சனாஸக்த தீ4 :
ருத்3ராக்ஷாவலி ப4ஸ்ம பூ4ஷிததனு:
பித்ராதி3 ஹ்ருன் மோத3க்ருத் ||

यस्यात्मजोऽकृतक वाक्य शिरोविचार-
संजातमोदचरितो ममताविहीनः ।
तत्तुल्यभाग्यरसिकः पुरुषोत्तमोऽपि
नेत्येव मन्मतिरतः सुमुखः सदाऽहम् ।।

யஸ்யாத்மஜோऽக்ருதக வாக்ய மிரோவிசார-
ஸஞ்ஜாதமோத3சரிதோ மமதாவிஹீன: |
தத்துல்ய பா4 க்3யரஸிக: புருஷோத்தமோऽபி
நேத்யேவ மன்மதிரத: ஸுமுக2: ஸதா3ऽஹம் ||

"எனது மூத்த பிள்ளை ஸ்வாபாவிகமாக அமைதியான குணம் படைத்தவன். எப்பொழுதும் தியானம் செய்வதில் விருப்பமுள்ளவன். வேதாந்தோபதேசங்களின் உட்கருத்துக் களை நன்கு அறிந்து வைத்திருப்பவன். ஸந்யாஸாச்ரமத்திலும் மற்ற ஆச்ரமங்களிலும் இருக்கும் பல மாணவர்களுக்கு அவன் தினந்தோறம் நான்கு சாஸ்த்ரங்களையும் இடைவெளியோ ஓய்வோ இல்லாமல் தொடர்ந்து பாடம் சொல்லுகிறான். அவனது சித்தமோ ஸதா சிவபூஜையிலும் சிவத்யானத்திலுமே பேராவலுடன் கூடிய ஈடுபாடு கொண்டிருக்கிறது. விபூதி, ருத்ராக்ஷமாலை இவைகளால் அலங்கரிக்கப்பட்ட சரீரத்துடன் பிரகாசிக்கிறான். தனது பெற்றோர்களுக்கும் மற்றவர்களுக்கும்

பெருமிதமான ஆனந்தத்தைக் கொடுக்கும் ஜோதியாக விளங்குகிறான்.

உபநிஷத்துக்களை ஆழ்ந்து படித்து சிந்தனை செய்வதால் தானாக ஏற்படும் ஆத்மானந்தத்தில் பூரிப்படைந்திருப்பவனும் அகங்காரத்தின் அடையாளம் கூட கொஞ்சமும் இல்லாமலிருப்பவனுமான ஒரு புத்திரனையடையும் பாக்கியம் பெற்ற நான் எப்பொழுதும் அளவு கடந்த ஆனந்த ஸாகரத்தில் மிதப்பவனாக இருக்கிறேன். இது போன்ற மகிழ்ச்சியை பிரபு புருஷோத்தமன் கூட அனுபவித்திருக்க முடியாதென்று நான் எண்ணுகிறேன்."

சாஸ்த்ரிகளின் தகப்பனார் கூத்தம்பாடி என்ற கிராமத்தில் வசித்து வந்தார். அவருடனிருந்த பெரிய குடும்பத்தைத் தனது ஸ்வல்பமான வருவாயைக் கொண்டு காப்பாற்றி வந்தார். அவருக்குச் சொந்தமாக ஆறு வேலி (சுமார் 40 ஏக்கர்) நஞ்சை நிலம் இருந்தன. ஆனால் அந்த நிலத்திற்குக் கடுமையான நிலவரி சர்க்காருக்கு ரொக்கமாகக் கட்ட வேண்டும். நிலத்தில் விளையும் நெல்லுக்குக் கிடைக்கக் கூடிய விலையோ மிகவும் குறைவானது. நாட்குறிப்பு என்ற உருவில் வெளிப்பட்ட அவரது கவிதா பிரவாகத்தில் அனேகமாக, அதிகுரூரமாக அழுத்தும் நிலவரிச்சுமை, ரொக்கப்பணத்திற்குத் தட்டுப்பாடு, மேலும் ஒரு விவசாயின் அழிவை முழுமையாக்கிவிடும் அதிவிருஷ்டி, அனாவிஷ்டி, புயல் முதலிய விஷயங்கள் பற்றியே அதிகம் காணலாம். ஒரு சமயம் அப்பா தீக்ஷிதர் அவர்கள் தன் பிள்ளைக்குத் தனது பொருளாதார இக்கட்டுகளை ஜாடைமாடையாக வெளிப்படுத்தி ஒரு கடிதம் எழுதினார். கடிதத்தைப் பார்த்த பிறகு தான் சாஸ்த்ரிகளுக்கு தகப்பனார் எவ்வளவு பெரம் சமையைத் தாங்கி வந்திருக்கிறார் என்பது புரிந்ததோடு, பிள்ளை என்ற முறையில் தனது பிதாவின் கஷ்டங்களை நிவிரத்தி செய்யவோ அல்லது குறைக்கவோ இதுவரை தான் ஏதும் செய்யவில்லையே என்று மிகவும் மனம் வருந்தினார்கள். உடனேயே திருவாங்கூர் மஹாராஜா ஸபையில்

தனது பாண்டித்யத்திற்கு அங்கீகாரம் பெற்று, ராஜமரியாதை, ஸம்மானங்கள் பெறலாமாவென்று தனது குருவான ஸ்ரீ நாராயண ஸரஸ்வதி ஸ்வாமிகளிடத்தல் ஆலோசனை கேட்டார்கள். வெகு தூரத்தில் இருக்கும் திருவனந்தபுரத்திற்குப் பிரயாணம் மேற்கொள்வது உசிதமில்லை என்ற ஸ்வாமிகள், அருகாமையிலிருக்கும் புதுக்கோட்டை ஸமஸ்தானத்திற்குப் போய் வரலாமே என்றார்கள். ஸ்வாமிகள் மேலும் சொன்னார்கள். புதுக்கோட்டை அரசர் எனக்கு நன்றாக அறிமுகமானவர். எனது நண்பனொருவன் மூலம் நான் ஏற்கெனவே அந்த அரசருக்கு உன்னைப் பற்றித் தெரிவித்து, மாமூலாக அரசர் நவராத்திரி உத்ஸவ காலத்தில் நடத்தும் வித்வத்ஸபைக்கு உனக்கு அழைப்பு அனுப்பும்படி சொல்லியனுப்பியுள்ளேன்". ஸ்ரீ கோபாலசார்யார் அவர்களும் இதே அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவே, உரிய காலத்தில் புதுக்கோட்டை அரசரிடமிருந்து வந்த அழைப்பை சாஸ்த்ரிகள் ஏற்றுக் கொண்டார்கள். தனது மதிப்புக்குரிய ஆசானின் யோசனைக்கு இணங்கத் தான் அந்த வருடம் புதுக்கோட்டை ஸமஸ்தான ஸதஸ்ஸுக்குச் செல்லவிருப்பதைத் தன் தகப்பனாருக்கும் கடிதம் மூலம் தெரிவித்துக் கொண்டார்.

சில வருடங்களுக்குப் பிறகு முன் எப்பொழுதும் கண்டிராத அளவுக்கு வரட்சி ஏற்பட்டபொழுது, சர்க்காருக்கு எப்படி நிலத்தீர்வை கட்டுவது என்று சாஸ்த்ரிகளின் தகப்பனார் மிகவும் பயந்து கொண்ட சமயம், மன்னார்குடியிலிருக்கும் தன் புத்திரனுக்கு உதவியைநாடிக் கடிதம் எழுதினார். சாஸ்த்ரிகள் தன் தகப்பனாரின் கஷ்டநிலையை அவ்வூரிலேயேமிருந்த குன்னியூர் நாணு அய்யர் என்ற தனிகரிடம் பிரஸ்தாபித்தார்கள். சாஸ்த்ரிகளிடம் பெரமதிப்புக் கொண்டவர்களும், அவர்களுக்கு எந்த சமயத்திலும் எந்தவிதமான கைங்கர்யமும் செய்யும் மனப்பான்மை கொண்ட அந்தவூர் பிரமுகர்கள் அநேகரில் ஸ்ரீ நாணு அய்யர் பிரதானபுருஷராக விளங்கியவர். அந்த நாணு அய்ரே அச்சமயம் சாஸ்த்ரிகளுக்கு உதவ வேண்டி, ஒரு இருநூறு

ரூபாய் பணத்திற்காகத் தனது கடுக்கன் ஜோடியை அடமானம் வைத்துத்தான் பணம் புரட்ட முடிந்ததாம். பஞ்சம் அந்த அளவுக்குத் தாண்டவம் ஆடிய காலம் அது. தக்க சமயத்தில் செய்யப்பட்ட இந்த உதவியால் சர்க்காருக்குச் செலுத்த வேண்டிய நிலவரி பாக்கிக்காக ஜப்தி செய்யப்படும் நிலையிலிருந்த குடும்ப நிலங்கள் காப்பாற்றப்பட்டன. ஸ்ரீ நாணு அய்யரின் இந்த ஔதார்யத்தை சாஸ்த்ரிகள் தனது வாழ்நாள் முழுக்க மிக்க நன்றியுடன் நினைவு கூறுவது வழக்கம். இதனால் இந்த இரு குடும்பங்களுக்குமிடையே பரஸ்பரம் ஒரு அன்பும் மரியாதையும் நிரந்தரமாக ஏற்பட்டது.

அந்த அக்ரஹாரத்தில் வசித்து வந்த தனிகர்களெல்லாம் கம்பீரமான கனவான்களாகவும் தெய்வ பக்தி நிரம்பியவர்களாயும் இருந்தார்கள். சாஸ்த்ரிகளிடம் பாடம் கேட்க நாலாபக்கங்களிலிருந்தும் வந்து மன்னார்குடியில் சிஷ்யர்களாகத் தங்கிய மாணாக்கர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் பெருகிக் கொண்டே வந்தது. அவர்களுக்கு அந்த அக்ரஹாரத்து தனிகர்கள்தான் தங்க இடமும், ஆகாரத்திற்கு வசதிகளும் செய்து கொடுத்து ஆதரித்தார்கள். மன்னார்குடி முதல் அக்ரஹாரம் சுமார் அரை நூற்றாண்டுக்கு மேல் வித்தை, தங்க இடம், ஆகாராதிகள் எல்லாம் கட்டணம் ஏதுமில்லாமல் தாராளமாக வழங்கப்படும் ஒரு "ரெஸிடென்ஷியல்" பல்கலைக் கழகமாய் விளங்கியது என்றே கூறலாம். இந்த விஷயத்தில் தனிகர்களுடைய ஒத்துழைப்பு தன்னிகரற்றதாக இருந்தது. சாஸ்த்ரிகளிடத்தில் அவர்களுக்கிருந்த பெருமதிப்புக் காரணமாகவும், மேலும் சாஸ்த்ரிகளவர்கள் தன் வாழ்நாட் களையே முழுமையாக அர்ப்பணித்திருந்த வித்யாதானம் என்ற கார்யத்தின் முழு முக்கியத்துவத்தை நன்றாகவே உணர்ந்திருந்த காரணத்தாலும் அவர்கள் தங்கள் வீடுகளில் மாணவர்களை ஆதரவாக இருக்க வசதி செய்து கொடுத்து, நிரந்தரமான அதிதி ஸத்காரம் செய்து வந்தார்கள். அவர்கள் அனேகமாக எல்லோருமே தங்களது சொந்த வாழ்க்கைமுறை, ஆசாரம்

முதலியவற்றிற்குத் தங்கள் முன்னே பிரத்யக்ஷமாக வாழ்ந்த ஸ்ரீ சாஸ்த்ரிகளை உயர்ந்த முன்னுதாரணமாகக் கொண்டார்கள். தவிர, அநேகர், சிஷ்யர்களுடன் வகுப்புகளில் சேர்ந்து பாடம் கேட்கவும் தொடங்கினார்கள். அதனால் பிரக்யாதி பெற்ற பேராசானின் அடிகளில் அமர்ந்து உபதேசம் பெற்ற தங்கள் பாக்கியத்தைப் பற்றிப் பிற்காலத்தில் பெருமதிதத்துடன் நினைவு கொள்ளும் வாய்ப்பைப் பெற்றார்கள்.

## நான்காவது அத்தியாயம்

## வாதப்பிரதிவாதங்களில் வெற்றிவாகை

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் வாழ்ந்த காலத்தில் தென்னிந்தியாவில் வசித்த பிரஸித்தி பெற்ற எந்த வித்வானும் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் சாஸ்த்ரிகளுடன் வாதப்பிரதிவாதத்தில் ஈடுபடாமல் இருந்திருக்க வாய்ப்பு இல்லை. புதுக்கோட்டையில் நவராத்திரி உத்ஸவத்தில் நடத்தப்படும் வித்வத்ஸதஸ்ஸாக இருக்கலாம், ராஜகோபால ஸ்வாமி கோவில் ஸம்வத்ஸர மகோத்ஸவ ஸதஸ்ஸாக இருக்கலாம் அல்லது மத்வ வைஷ்ணவ மதத்தலைர்கள் முன்னிலையில் ஏற்பாடு செய்யப்பட்ட "வாக்யார்த்தங்கள்" ஆக இருக்கலாம் அல்லது தனவான் ஒருவர் வீட்டில் நடக்கும் கல்யாணத்தில் ஏற்பாடாகும் ஸதஸ்ஸாகவும் இருக்கலாம் - இம்மாதிரி சந்தர்ப்பங்கள் அடிக்கடி நிகழ்வதுண்டு. புத்திபூர்வமான வாதப்பிரதிவாதங்களில் அவரவர் மேதா விலாஸத்தைக் காட்டுவது அக்காலத்தில் ஒரு வீரச்செயலாக மதிக்கப்பட்டது. இம்மாதிரியான வாக்குவாதங்களில் பண்டிதர்கள் ஒரு போட்டி மனப்பான்மையுடன் பொருத்தமான மேற்கோள்கள், தக்க ஆதாரங்கள் முதலியவற்றை முன்வைத்து

தங்கள் விவாதசக்தியை வெளிப்படுத்துவார்கள். அக்காலத்திய நன்கு கற்றறிந்த உயர்மட்டப் பிரபுக்கள் வித்வான்களுக்கு இம்மாதிரி சந்தர்ப்பங்கள் ஏற்படுத்திக் கொடுத்து - இக்காலத்தில் பிரஸித்தமாக நடக்கும் பட்டிமன்றங்களைப் போல என்று சொல்லலாம் - அவைகளினால் தாங்களும் ரஸமான மானஸோல்லாஸத்தையனுபவித்தார்கள். அகில உலக அரங்குகளில் பிரஸித்தி பெற்ற விளையாட்டு வீரர்கள் கலந்து கொள்ளும் ஒரு "கிரிக்கெட் டெஸ்ட் மாட்சு" பார்த்து மகிழ்வதில் தற்காலத்திய நாகரிக மனிதர்கள் விசேஷ ஆர்வம் காட்டுவது போல், அந்தப் பிரபுக்கள் இம்மாதிரி வித்வத் ஸபைகள் அமைத்து அனுபவிக்க எந்த தியாகம் வேண்டுமானாலும் செய்வார்கள் . ஒவ்வொரு ஸதஸ்ஸிலும் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களே வாதங்களில் சுலபமாக வெற்றி வாகை பெற்று அந்தந்த சாஸ்திரத்தில் விசேஷமான அறிவாற்றல் பெற்றிருந்த வித்வான்களையும் விடத் தான் உன்னத நிலையில் உள்ளவர் என்பதை எவ்வாறு நிரூபித்தார் என்ற விவரங்கள் இங்குத் தேவை இல்லை. ஆரம்பத்தில் எதிர்வாதியாகத் தொடங்கிய தலைசிறந்த பேச்சாளர்கள், வாதங்களின் முடிவில், அவ்யக்தமான பிரகரணங்களிலும் சாஸ்த்ரிகளுக்கு இருந்த விசேஷமான கையாளும் சக்தியையும், தர்க்கந்யாய சாஸ்த்ர சம்பந்தமாக எழுதப்பட்ட ஆதாரகிரந்தங்களின் கிரந்த கர்த்தாக்களையே மங்க அடிக்கும் அவர்களது கற்பனாசக்தியையும், தங்குதடையில்லாமல் அவ்வப்போது அவர்களுக்கு யுக்தியோடு கை கொடுக்கும் பரந்த விஷய ஞானத்தையும், எல்லாவற்றிற்கும் மேலாக அற்புதமாகவும், கம்பீரமாகவும் இருந்த அவர்களது பேச்சாற்றல் திறனையும் கொஞ்சம்கூட மனத்தயக்கம் இல்லாமல் வாயாரப் புகழ்ந்து அவர்களுக்கு மிக்க மரியாதையோடு கூடின வந்தனங்கள் செய்துவிட்டுத் தான் போவார்கள் என்று சொன்னாலே போதும். சாஸ்த்ரிகளின் உபந்யாசத்தை ஒரு சமயம் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணானந்தயதி பின்வருமாறு அவரைப் புகழ்ந்து உரைத்தார்.

अन्यादृशीयमपदोषपदप्रयुक्ति-

रन्यादृशोऽयममितप्रतिभाविशेषः ।

अन्यादृगेष विनयादिगुणप्रकर्षो

मन्ये न कश्चन बुधः सदृशोऽस्तयमीषाम् ।।

அந்யாத்$^{3}$ருஶீயமபதோ$^{3}$ஷபத$^{3}$ ப்ரயுக்தி-
ரந்யாத்$^{3}$ருஶோ ऽயம் அமிதப்ரதிபா$^{4}$ விஶேஷ: |
அந்யாத்$^{3}$ருகே$^{3}$ஷ விநயாதி$^{3}$கு$^{3}$ணப்ரகர்ஷோ
மந்யே ந கஶ்சனபு$^{3}$த$^{4}$: ஸத்$^{3}$ ருஶோஸ்த்ய- மீஷாம் ||

"அவச்சொல் கலக்காமல் ஸ்வச்சமாக இருக்கும் அவர் பேச்சுத்திறன் பிறரால் கையாள முடியாதது. அவரது சமயோஜித மேதாவிலாஸமோ நிகரற்றது. அவரது அவை யடக்கத்தையும் விலை மதிக்க முடியாத மற்ற குணவிசேஷங்களையும் நாம் வேறொருவரிடமும் காண இயலாது. நான் அறிந்தவரையில் பண்டித உலகில் தற்போது அவருக்கு நிகர் என்று குறிப்பிடக்கூடியவர் யாருமில்லை"

ஒரு சமயம் புதுக்கோட்டையில் நடந்த ஸதஸ்ஸில் "வையாகரண" ரங்காச்சாரி என்ற வித்வான், தனக்கு விசேஷமான தேர்ச்சி இருந்த வியாகரண சாஸ்திரம் சம்பந்தப்பட்ட "வாக்யார்த்தத்தில்" தனது பக்ஷத்திற்கு உத்வேகமான பலயுக்தி வாதங்களைக் கையாண்டும் கடைசியில் தோற்றார். அவர் தனது தோல்வியை ஏற்றுக் கொண்டதோடு சாஸ்த்ரிகளைக் கீழ்கண்ட சுலோகங்களால் மனமார வியந்து பேசினார்:-

सिंहोऽयमप्रतिभटः के वयं तत्पुरो मृगाः

गुणतः शास्त्रतो वापि मृग्यतामीदृशोऽपरः ।।

ஸிம்ஹோऽயம் அப்ரதிப⁴ட:
கே வயம் தத்புரோ ம்ருகா³: |
கு³ணத: மாஸ்த்ரதோ வாபி
ம்ருக்³யதாமீத்³ருமோऽபர: ||

"குண விசேஷத்திலோ, சாஸ்திர ஞானத்திலோ யாரும் எதிர்ப்பு எழுப்பமுடியாத ஸிம்ஹம் அவர்கள். சுலபமாக வேட்டைக்கு இரையாகக் கூடிய மான்களாகிற நாம் அந்தச் சிங்கத்தின் முன் எம்மாத்திரம்?"

बाहुना सिन्धुतरणं जिह्वयाऽसि विघट्टनम् ।
कुरुतेऽयमनात्मज्ञो यस्त्वेतान् जेतुमिच्छति ।।

பா³ஹுனா ஸிந்து⁴ தரணம்
ஜிஹ்வயாऽஸி விக⁴ட்டனம் |
குருதேऽயம் அநாத்மக்ஞோ
யஸ்த்வேதான் ஜேதுமிச்ச²தி ||

"இந்த மஹானை எவனொருவன் தனது சக்தியின் எல்லை யறியாமல் வாதத்தில் வென்றுவிட வேண்டுமென்று எண்ணுகிறானோ, அவனது முயற்சிகள், மகாஸமுத்திரத்தை கைமாறு போட்டு நீந்தி தாண்டிவிடலாம் என்று எண்ணவதற்குத் தனது நாக்கைக் கூரான வாள்முனையில் உரசிப் பார்ப்பதற்குத் தான் சமம்".

புதுக்கோட்டையில் நடந்த நவராத்திரி ஸதஸ்ஸுகள் அனேகவற்றில் சாஸ்த்ரிகள் கலந்துகொண்டு தனது உயர்வான தனித்தன்மையை நிலைநாட்டிக் கொண்டார். அதனால் மஹாராஜாவுக்கும், ஸமஸ்தான அதிகாரிகள், பண்டித சிகாமணிகள் மற்றும் பொதுஜனங்கள் முதலியோருக்கும் சாஸ்த்ரிகளிடமிருந்த மதிப்பும் கௌரவ புத்தியும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது.

அரச சபைகள் ஆஸ்தான பண்டிதர்களால் ஆட்டுவிக்கப் படுவனவே! ஒருநாள் இல்லாவிட்டால் மற்றொரு நாள் அவை உயர்ந்த பண்புகள் பெற்றவர்களின் மிருதுவான உள்ளங்களைப் புண்படுத்தத் தவறுவதில்லை. வித்வத் ஸதஸ்ஸுகளில் கலந்து கொண்டு தனது பாண்டித்யத்தை வெளிப்படுத்துவதிலிருந்த உத்ஸாகத்தையெல்லாம் விட்டொழிக்க வேண்டுமெனத் தோன்றுமளவுக்கு மனோவேதனையளித்த ஒரு துர்பாக்கியமான அனுபவம் விதி வசத்தால் ஒரு சமயம் சாஸ்த்ரிகளுக்கு ஏற்பட்டது. அக்காலத்தில் வித்வத்தில் உயர்ந்த கௌரவ ஸ்தானத்தைப் பெற்றவரும் ஆனால் மஹாகர்வியாயுமிருந்த ஸ்ரீ வேங்கடராம வாஜபேயர் என்ற பண்டிதரை அவமானப்படுத்த வேண்டுமென இந்த ஸமஸ்தானத்தின் ஆஸ்தான பண்டிதர்கள் ஒரு கபடமான திட்டம் வகுத்து, அதில் ஸ்ரீ சாஸ்த்ரிகளை இதுபற்றி ஏதுமறியாத நிலையில் ஈடுபடுத்தி விட்டார்கள். இப்படி ஏற்பாடு செய்யப்பட்ட வாதத்தில் வழக்கம் போல் சாஸ்த்ரிகளின் வாதமே மேலோங்கி வாஜபேயரின் வாதம் அடிபட்டுவிட்டது. ஆனால் விவாத முடிவில் ஆஸ்தான பண்டிதர்களால் வாஜபேயரின் தோல்வியையும் தங்கள் திட்டத்தின் வெள்ளியையும் பிரகடனப்படுத்தி எழுப்பபட்ட கோஷங்களினால் ஸ்ரீ வாஜபேயர் அவர்கள் கண்ணீர் விட்டழுதார்கள். சாஸ்த்ரிகள் தன் வாழ்நாள் முழுவதும் இந்த நிகழ்ச்சியை நினைத்து நினைத்து ஒரு பண்டிதரை அவமானப் படுத்தவென்றே தாம் ஈடுபடுத்தப்பட்டோமே என்று வேதனையுடன் குன்றிப்போவார்கள்.

ஒரு சமயம் ராமநாதபுரம் மஹாராஜாவின் அழைப்பின் பேரில் ஸ்ரீ சாஸ்த்ரிகள் ராமநாதபுரத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்கே ராஜாவினால் மிக்க மரியாதையுடன் அவர்கள் வரவேற்கப்பட்டார்கள். மேலும் சாஸ்த்ரிகளுக்குஅங்கே அளிக்கப்பட்ட ஸம்மானங்கள் மிகவும் உதாரமாக இருந்த போதிலும் மிகுந்த பணிவுடன் வெளிப்பகட்டு ஏதுமன்னியில் ஸமர்ப்பிக்கப்பட்டதும் விசேஷமாகும்.

## ஐந்தாவது அத்தியாயம்

## சிஷ்யர்களும், வகுப்புகளும் போதனா முறையும்

சாஸ்த்ரிகளின் புகழ் பெருகப் பெருக அவரிடம் பாடம் கேட்க வரும் மாணவர்களின் எண்ணிக்கையும் வளர்ந்து கொண்டே இருந்தது. அருகிலிருந்தும் வெகு தூரத்திலிருந்தும், வாலிபர்-வயது வந்தவர்கள்-பிரம்மச்சாரிகள்-க்ருஹாதர்கள்-ஸந்நியாஸாச்ரமத்தை அவலம்பித்தவர்கள் என்று பலவிதமான பாகுபாபட்டிலுள்ளவர்களும், தமிழ்நாடு, ஆந்திரா, மலையாளம் (தற்போதைய கேரளா) மஹாராஷ்ட்ரம் முதலிய வெகு துாரத்திலுள்ள வேறு மாகாணங்களிலுள்ளவர்களும் வித்தையைத் தேடி மன்னார்குடிக்கு யாத்திரை செய்து சிஷ்யர்களாக சாஸ்த்ரிகளை வந்தடைந்தார்கள். அவ்வூர் மிராசுதாரர்கள் தங்கள் தங்கள் வீட்டில் தன்னை வைத்துக் கொண்டோ அல்லது க்ருஹஸ்ராயிருந்தவர்கள் தனிக் குடித்தனமாக இருப்பதானால் அதற்கு வேண்டிய வசதிகளையும் திரவிய ஸஹாயமும் செய்து கொடுத்தோ, வெளியூரிலிருந்து வந்திருந்த சிஷ்யர்கள் பலரை அவர்களது சாஸ்த்ர பாடங்கள் முடியம் வரை ஆதரித்து வந்தார்கள். ஸந்நிஸஸாச்ரமத்திலிருந்த சிஷ்யர்கள் கோபிநாதன் குளக்கரையிலிருந்த மடத்தில் தங்கி வந்தார்கள். சமீபமாக ஓடிக்கொண்டிருக்கும் பாமணி ஆறு ஒரு பக்கமும், வேறு பக்கத்தில் கம்பீரமான சிவன், விஷ்ணுவுக்கான ஒரு ஆலயங்களுடன் கூடியிருந்த மடமானது இந்த ஸந்யாஸிகளின் வாசத்திற்கும் மிகவும் பொருத்தமான வாசஸ்தலமாக அமைந்திருந்தது. ஓரிரு பர்லாங் தூரத்தில் இருந்த அக்ரஹாரத்தில் வசித்து வந்த பல க்ருஹஸ்தர்கள் போதிய வசதியுள்ளவர்களாக இருந்ததோடு தொன்மையான கல்வி வளர்வதில் தாராளமான மன ஈடுபாடு கொண்டிருந்த காரணத்தினாலும் இந்த ஸந்நியாசிகளுக்கு விடாமல் பிக்ஷைகளுக்குத் தொடர்ந்து ஏற்பாடு செய்து வந்தார்கள். ஆகவே சாஸ்த்ரிகளிடம் பாடம் கேட்டு வந்த மூன்றுவித

ஆச்ரமத்தைச் சேர்ந்த சிஷ்யர்களின் காலக்ஷேபமும் வித்யாப்யாஸத்திற்கு அனுகூலமான வகையில் அமைந்து இருந்தது. ஸந்நியாஸிகள் சிஷ்யர்களாக வந்த வகுப்புகளில் பாடம் ஆரம்பிப்பதற்கு முன் சாஸ்த்ரிகள் ஒரு க்ருஹஸ்தன் ஸந்நியாஸிக்குக் காட்ட வேண்டிய மரியாதை முறையை யனுசரித்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பது வழக்கம். அந்த ஸந்நியாஸிகள் (அதில் அனேகர் இளம் வயதினராகவே இருந்தார்கள்) முதிர்ந்த வயதுடையவரும், தங்கள் பாதங்களில் விழுந்து வணங்குவதைப் பார்க்கும் பொழுதெல்லாம் வேதனையுடன் குன்றிப் போவார்கள். ஆனால் மீறமுடியாமலிருந்த ஆச்ரம தர்மத்தை அனுஷ்டித்த சாஸ்த்ரிகளைத் தடுத்துச் சொல்ல முடியாதவர்களாகவும் இருந்தார்கள்.

ஸந்நியாசிகள் அல்லாத மற்ற சிஷ்யர்களிடம் சாஸ்த்ரிகள் அன்பும் வாத்ஸல்யமுமிக்க தகப்பனாரைப் போலத்தான் பழகி வந்தார்கள். ஆனால் அந்த சிஷ்யர்களோ, அத்யாத்ம சோபையுடன் ஜ்வலித்த தங்கள் ஆசானின் முன்னிலையில் ஒரு தெய்வ ஸந்நிதிக்குரிய பயபக்தி மரியாதையுடன்தான் நிற்பார்கள்.

பாடம் நடக்கும் சமயம் மிகுந்த கட்டுப்பாடு அனுஷ்டிக்கப்படும். ஒருவரிடம் இருந்தாவது கொஞ்சமும் குசுகுசுப்பு, கொட்டாவி, சிரிப்பொலி அல்லது ஹாஹாகாரம் போன்ற சிறிய சப்தமும் எழாது, அதற்குத்துணியமாட்டார்கள். மேலும் கவனக்குறைவுக்கு அடையாளமான எந்தவிதமான செய்கையோ கூட அவர்களிடம் காணப்படமாட்டாது. இங்குமங்கும் பார்க்கவோ அல்லது தலையை நிமிர்த்தவோ கூடச் செய்யமாட்டார்கள். அவ்வளவு ஏன்? கை கால்களைக் கூட மாற்றிப் போட்டுக் கொள்ள மாட்டார்கள். குருவின் வாய்வழி பெருக்கெடுக்கும் உபதேசமாகிற அம்ருத தாரையின் ஒவ்வொரு திவலையைக் கூட விடாமல் விழுங்க வேண்டிமென்ற ஆர்வத்தில் அவர்கள் ஏகாக்ர சித்தர்களாக இருந்து கொண்டு வந்த கவனத்துடன் பாடம் கேட்பார்கள். ஒவ்வொரு வகுப்பிலும்,

சாரீரம், உச்சரிப்பு. ஸதா விழிப்புணர்ச்சி, விஷயத்தை க்ரஹிக்கும் புத்தி சாதுர்யம் முதலியவையுள்ள ஒரு மாணாக்களைப் பொறுக்கி, அவனை மூலகிரந்தத்தைப் படிக்கச் சொல்லுவது வழக்கம். மற்றவர்கள், கையிலிருக்கும் புத்தகத்தையோ எழுத்துப் பிரதியையோ பார்த்து வருவார்கள். ஒவ்வொரு வாக்கியம் படிக்கப் பட்டவுடன், ஆசான் அதை மாணாக்கர்களுக்கு விளக்குவார்கள். அவருக்கு கையில் புத்தகப் பிரதி தேவைப் பட்டதில்லை. கையெழுத்துப் பிரதிகளில் எழுதியவரின் கைப்பிசகால் தவறான பாடங்கள் இருந்து அந்த இடங்களில் தடுமாற்றம் அடையும் மூலம் வாசிக்கும் மாணவரை நிறுத்தி, திருத்தமான பாடத்தை எடுத்துக் கொடுப்பார்கள். முதலில் மூலத்தைச் சுருக்கமான விளக்கத்துடன் புரிய வைப்பார்கள். பிறகு ஒவ்வொரு வ்யாக்யான கர்த்தாவின் பொருள் செறிந்த உரைகளையும் எடுத்துச் சொல்லி விரிவுப்படுத்தி விளக்குவார்கள். எந்தப் பாடம் ஆரம்பிக்குமுன்னும், தேவையான முன் நடந்த சரிதம், விமர்சனம், ஸாத்ருச்யமான நிகழ்ச்சிகள், விருத்தாந்தங்கள் நிரம்பிய முன்னுரைகள் இருக்கும்.

மேலும் பொருத்தமான இடங்களில் மஹாவித்வான்கள் ஆசார்யர்கள் இவர்களின் வாழ்க்கைகளில் ஏற்பட்ட, கேட்போரை உய்விக்கக்கூடிய நிகழ்ச்சிகளையும் எடுத்துச் சொல்லும் பொழுது உபதேங்களின் ரஸம் மேலும் கூடும். நேரிடையாக மனஸில் பிடிபடாத தத்துவங்களடங்கிய இடங்களையும் மிகவும் தெளிவாகக் கிரஹிக்கும்படி எளிமையான முறையில் சாஸ்த்ரிகள் விளக்கும் விதம் அதிசயக்கத்தக்கதாகும். ஆசான் தன் சுற்று வீக்ஷணத்தாலேயே பாடம் சரியாக கிரஹிக்காமல் தடுமாற்றமுற்று மேலும் விளக்கம் கொடுத்துப் பரிய வைக்க வேண்டிய மாணாக்களை இனம் கண்டு கொண்டு, அவரைத் தெளிவடையச் செய்வார்கள். முன் தினம் நடந்த பாடங்களைச் சொல்ச் சொல்வதன் மூலம் மாணவர்கள் அவ்வப்போது பரீக்ஷிக்கப்படுவார்கள். கூர்மையான புத்தியுள்ள மாணவன்

பாடம் நடக்கும் போது சொல்லப்பட்ட விளக்கங்கள் தனக்கு நன்றாகப் புரிந்துவிட்டதை ஆமோதன சப்தங்களாலோ அல்லது இதர சேஷ்டைகளாலோ வெளிப்படுத்தும் பொழுது, அந்நடத்தை வகுப்புக்கு உசிதமான செயல் அல்ல என்று கண்டிப்பார்கள். மாணவர்களின் ஆடை, பழக்க வழங்கங்கள், நடவடிக்கை இவைகளில் உள்ளும் புறமும் சுத்தமாக இருப்பதோடு உயர்ந்த பரிஷ்காரத்தையும் சாஸ்த்ரிகள் எதிர் பார்த்தார்கள். அந்தக் குறிப்பறிந்த மாணவர் ஒவ்வொருவரும் இந்த விஷயங்களில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு சாஸ்த்ரிகளின் எதிர்பார்ப்புக்குக் குறைவில்லாமல் நடந்து வந்தார்கள். வெட்டிப் பேச்சுகளில் ருசியோடு ஈடுபடும்அல்லது அஹங்காரத்தில் மரியாதையற்ற பேச்சு பேசும் மாணவர்களை இவர்கள் ஸஹவாசத்தினால் மற்ற நல்ல மாணவர்கள் பாதிக்கப்பட்டுவிடக் கூடுமென்பதால் நிர்தாக்ஷிண்யமாக விலக்கி விடுவார்கள். சாஸ்த்ரிகளின் சிஷ்ய வரிசையில் கடைசியில் இருந்தவரும், அவர்களின் சரித்திரத்தை ஸம்ஸ்க்ருதத்தில் எழுதி நமக்களித்தவருமான அன்னாரின் பேரன் ஸ்ரீ யக்ஞ ஸ்வாமி சாஸ்த்ரிகள் குறிப்பிடுகிறார். - "இந்த மஹோபதேசகர் நடத்தின பிரும்ஹாநந்திய பாடங்களும் ரஸமான காவ்ய பாடம் கேட்பது போல மனோஹ்லாதமாக இருக்கும்" என்று.

இரவு சாப்பாட்டிற்குப் பின் சீடர்கள் குருவின் வீட்டு வாசல் திண்ணையில் கும்பலாக விளக்கடியில் உட்கார்ந்து கொண்டு அன்றைய பகற்பொழுதில் நடந்த பாடங்களை மனனம் பண்ணுவது வழக்கம். சில நாட்களில் சாஸ்த்ரிகள் படக்கப்போகமுன், வாசற்கதவிற்குப் பின்னால் இருக்கும் ரேழியில் மாணவர்களால் பார்க்கப்படாமல் இருட்டில் உட்கார்ந்து கொண்டு அவர்கள் பாடத்தைத் திருப்பிப் படிப்பதைக் கவனித்துக் கேட்டுக் கொண்டிருப்பார்கள். இப்படி கவனிப்பது, மாணவர்கள் எந்த இடத்தில் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று கண்டு கொள்ள உதவும். மறுநாள் வகுப்பு ஆரம்பிக்கும்போது, எதேச்சையாகக் கேட்பது போல் அந்த இடத்தைப் பற்றியே

கேள்வி கேட்டு, மாணவர்களுக்கு ஏற்பட்ட சங்கையை அகற்றித் துல்லியமாக விளங்க வைத்து விடுவார்கள். சில சமயங்களில் மாணவர்களே தங்களுக்கு ஏற்படும் சந்தேகங்களையும் சரியாக விளங்காத விஷயங்களையும் குருவிடம் தெரிவித்துக் கொள்வார்கள். கேட்கப்படும் கேள்வியோ, சந்தேகமோ மிக அற்பமாகவோ அல்லது முட்டாள்தனமாகவோ கூட இருந்தாலும் குரு கோபித்துக் கொள்வதில்லை. மாறாக மிகவும் பொறுமையுடனும் அனுதாபத்துடனும் அந்த சந்தேங்களை நிவர்த்தி செய்து வைப்பார்கள். இதற்காக அவர்கள் கையாளும் முறையோ மந்தாதிகாரியான அந்த மாணாக்களையும் புத்தியைச் செலுத்தி கிரஹணம் செய்யும் சக்தியை ஊக்குவிப்பதாக அமையும்.

பெரும்பாலான மாணவர்கள் சாஸ்த்ரிகளிடம் உயர்நிலை வேதாந்த கிரந்தங்களைப் படிப்பவர்களாகவே இருந்த போதிலும், ஆரம்ப நிலையில் படிக்கச் சேர்ந்தவர்களுக்கும் சாஸ்த்ரிகள் ஒருமணி நேரம் ஒதுக்கிக் காவ்ய, நாடக பாடங்கள் நடத்துவதை ஒருபோதும் தனக்குக் கௌரவக் குறைவாக எண்ணியதில்லை. மிகுந்த நிர்ப்பந்தமான அழைப்பின் பேரில் தான் சாஸ்த்ரீகள் வெளியில் கிளம்புவது வழக்கம். அப்படி வெளியிடங்களுக்குச் செல்லுங்கால் தன்னுடன் சில தேர்ந்து எடுத்த சிஷ்யர்களையும் அழைத்துச் செல்வார்கள். அந்த இடங்களில் நடக்கும் பண்டித ஸதஸ்ஸுகளில் அந்த சிஷ்யர்களையும் ஈடுபடுத்தி அவர்களின் பாண்டித்யத்தை வெளிப்படுத்த ஒரு சந்தர்ப்பமளிக்கத் தவற மாட்டார்கள். தன்னால் முடியுமானால், தனது சிஷ்யர்கள் நல்ல வாழ்க்கை அமைத்துக் கொள்ள வேண்டி, அவர்களை ஆதரிக்கும்படி தனிகர்களிடம் சிபார்சும் செய்வார்கள். சாதாரணமாக இம்மாதிரி சபாரிசுக்குத் தேவை ஏற்படுவது மிகவும் அபூர்வம். ஏனெனில் பெரியவாளின் சிஷ்யன் என்று அறிமுகம் செய்து கொண்ட மாத்திரத்திலேயே அவர்களுக்குச் சென்றவிடத்திலெல்லாம் கௌரவமான வரவேற்பு, வேறெந்த சிபார்சுமில்லாமலேயே கிடைத்துவிடும்.

சாஸ்த்ரிகளிடம் கருகுலவாசம் செய்த நூற்றுக்கணக்கான சிஷ்யர்களில் குருவுடன் கழித்த நாட்களைப் பற்றி நினைவு கூறாதவர் ஒருவர்கூட இருக்க மாட்டார். தன்னிகரற்ற அறிவுப் பிழம்பாகவும், அதே சமயம், உன்னதமான ஞான ஸ்வரூபமாகவும் திகழ்ந்த ஒரு மகானை ஆசானாக அடையும் பாக்கியத்தைத் தங்களுக்கு அளித்த ஆண்டவனுக்கு அவர்கள் மனமார நன்றி செலுத்தினார்கள். பிற்காலத்தில் வாழ்க்கையில் எந்தவித சூழ்நிலையிலும் அவர்களது குருவின் ஸ்மரணமே அவர்களை அவ்வப்போது ப்ரோத்ஸாகப்படுத்தி நல்லவழியில் செல்ல உதவும் கலங்கரை விளக்காக இருந்தது. மேலும் அவர்களது வாழ்க்கையைப் பரிசுத்தப்படுத்தி அவ்வப்போது அந்தர்யாமியாக இருந்து உய்வித்துக் கைதூக்கி விட்டுக் கொண்டிருந்ததும் அந்த மகானின் அபார சக்தியே. சாஸ்த்ரிகளின் சிஷ்யர்களில் பலர் அவாக்ள் வாழ்நாளில் மிகப் பிரஸித்தமான வித்வான்களாகத் திகழ்ந்ததோடல்லாமல் தங்கள் வித்தையை காசி முதல் ராமேச்வரம் வரையுள்ள அடுத்த தலைமுறையினருக்கும் பரப்பி வந்தார்கள். ஆனால் சிஷ்யர்களில் எவரும் - பிரஸித்தி பெற்று புகழேணியில் ஏறினவர்கள் அல்லது ஏனையோர் - ஒருபொழுதும் சாஸ்த்ரிகளிடம் தங்களுக்கிருந்த உத்க்ருஷ்டமான உறவைப்பற்றி அவ்வப்போது நினைவுகூர்ந்து பேசுவதற்குத் தவற மாட்டார்கள். மஹானான அந்த குருவின் குணாதிசய ங்களையும், பெருமையையும் எடுத்துச் சொல்லும் பொழுது கேட்போரைப் பரவசப்படுத்துவதுடன், தாங்களும் குருவின் ஸ்மரணையில் வயித்து மன உய்வு பெற்று ஆனந்தக் கண்ணீர் விடுவார்கள்.

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்கள், தனது சிஷ்யர்கள் நற்குணசீலர்களாக வளர வேண்டுமென்ற அவசியத்தை அறுதியிட்டுச் சொல்வார்கள். இதற்குப் புராணங்களிலிருந்து அனேக கதைகளை மேற்கோள்களாக எடத்துச் சொல்வார்கள். இது சம்பந்தமான அவர்களது உபதேசங்களாவன:-

1. ஆசானிடம் உரிய மரியாதை, பேராசையின்மை, சோம்பலில்லாமலிருத்தல், படிப்பதில் உண்மையான ஆர்வம் இந்த நான்கும் அறிவை வளர்க்க விரும்புபவர்க்கு மிகவும் அவசியமான குணங்களாகும்.

2. வினயம், இனிமையான அதேசமயம் உண்மைக்குப் புறம்பில்லாதபடி பேச்சு, பிறருக்கு உதவுவதில் ஈடுபாடு, தன் அறிவைப் பெருக்கிக் கொள்ளும் விஷயத்தில் தளர்ச்சியடையாத முயற்சி முதலிய இந்த குணாதிசயங்கள் உள்ளவரைப் புகழ் தேடி வருவது நிச்சயம்.

3. உடல் தூய்மை, உள்ளத்தூய்மை, முன்னோர்கள் அமைத்துக் கொடுத்திருக்கும் முறையில் வாழ்க்கை நடத்துதல், பெரியோரிடம் மரியாதை கலந்த பக்திகாட்டுவது, பெண்கள் விஷயத்தில் தன்னடக்கம், காலாகாலத்தில் முழுமையான ஆகாரம் சாப்பிடுவது முதலியன ஒருவருக்கு நீண்ட ஆயுளை அளிக்கவல்லது.

ஜனங்களின் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிய சாஸ்த்ரிகள் தனது பொதுவான கருத்துக்களைத் தனது மாணவர்கள் தெரிந்து கொண்டு உன்னத நிலையையடைய வேண்டுமெனக் கருதிக் கீழ்கண்டவாறும் உபதேசிப்பது வழக்கம்.

1. வாழ்க்கையில் இன்பத்தைத் தேடியலையும் ஜனங்கள் தங்கள் ஆவலில் நேர்மாறான வழிகளில் பரிதாபகரமாகத் தடுமாறி கடைசியில் அடைவது என்னவோ துக்கம் தான்.

2. "வாஸனை" என்று குறிப்பிடப்படும் விஷயாதிகளில் ஈர்ப்பு, தடுத்து நிறுத்த முடியாத ஒரு சக்தி.

3. முற்பிறவிகளில செய்த நல் வினைகளின் பயனாக இப்புவியில் ஸத்விஷயங்களில் ப்ரவிருத்தி அதாவது ஈடுபாடு கொள்ளும் ஜீவன்களுக்குத்தான் மோக்ஷமார்க்கத்தில் இன்னும் முன்னேற சாஸ்திராப்யாஸங்கள் உதவும்.

4. எல்லா மதங்களிலும் முரண்பாடு இல்லாமல் பொதுவாக ஒப்புக் கொள்ளக் கூடிய கொள்கைகளே அதிகமாக இருக்கின்றன.

5. விசிஷ்டாத்வைத மதகுருவான ஸ்ரீ ராமானுஜாசார்யரது மத ஸித்தாந்தங்களைச் சொல்லும் போதனைகளைத் தங்கள் மதத்திற்கு முழுமையும் பொருந்தாது என்று எந்த அத்வைதியும் நிராகரித்து விடமுடியாது.

6. இவ்வுலக நடப்புகளில் ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது மேலெழுந்தவாரியாகவுள்ள மூட்டமாகும். ஆய்ந்து நோக்கும் மனிதனை அது ஈர்க்காது. அவனுக்கு அவைகளில் எந்தவிதக் "கவர்ச்சியும்" இல்லவே இல்லை.

7. வாழ்க்கையின் பயனையடைய விரும்புவோன் அதற்கான பத்ததியான முயற்சிகளில் தன்னைத்தானே த்ருடமாக அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்.

8. இடைவிடாமல் தொடர்ந்து விடா முயற்சி செய்தால் ஒவ்வொருவனும் தன் லக்ஷ்யத்தை நிச்சயமாக அடைந்து விட முடியும்.

இவ்வாறு உலகியல் சம்பந்தமான புத்திமதிகளை எடுத்துரைத்தபின் பரம சிதானந்தத்தை அடைவதற்குண்டான மார்க்கங்களைப் போதிக்கும் முறையாகிற ஸகல சாஸ்திரங்களின் உபதேசங்களின் ஸாரத்தைச் சுருக்கமாகக் கீழ்க்கண்ட சுலோகத்தினால் குறிப்பிடுவார்கள்.

आशापाश शतानुबन्धकलना दोषाविलं मानसं
निष्कामैरिह कर्म्मभिः सुविहितैः शुद्धिं परां विन्दति ।
ध्यानेन स्थिरतामुपैति तदनुश्रुत्यादिभिः साधनैः
शुद्धादैत सुखाकृतिं परिणतिं पुष्णातिपुष्यात्मनाम् ।।

ஆஶாபாஶ ஶதானுப3ந்த4 கலநா தோ3ஷாவிலம் மானஸம்
நிஷ்யகாமைரிஹ கர்மபி4: ஸுவிஹிதை: ஶுத்3 தி4ம் பராம் விந்த3தி |
த்4யாநேன் ஸ்தி3ர தாமுபைதி தத3 னுஶ்ருத்யாதி3பி4: ஸாத4னை:
ஶுத்3தா4த்3வைத ஸுகா2க்ருதிம் பரிணதிம் புஷ்ணாதி புண்யாத்மனாம் ||

"ஆசாபாசங்களினால் தூண்டப்பட்டு நூற்றக்கணக்கான சிக்கல்களில் மாட்டிக்கொண்டு பாப சிந்தனைகளையுடையதும் அதனாலேயே ஸதா துக்கத்திலாழ்ந்திருக்கும் மனதையுங்கூட, சொந்த லாபத்தையோ எந்தவிதமான பயனையோ எதிர் பார்க்காமல் நல்ல நோக்கமுள்ள தர்ம காரியங்களைச் செய்வதில் ஈடுபடுத்துவன் மூலம் பரிசுத்தமாக்கி விடலாம். அப்படிப் பரிசத்தமான மனதை த்யானத்தினால் சமநிலை பெறச் செய்து பிறகு வேதாந்த உபதேசங்களின் உதவியுடன் பிரம்மத்தில் ஐக்யம் என்ற அத்வைத பிரம்மானந்தத்தை அடைய முடியும்.

## ஆறாவது அத்தியாயம்

## பிரஸித்தியடைந்த சிஷ்யர்கள்

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் சிஷ்யர்களில், நாளாவட்டத்தில் வளர்ந்து வித்வான்களுக்கு மத்தியில் ஜ்வலிக்கும் தாரகைகளாக விளங்கினவர்களும் சாஸ்திர ஞானத்தையும், ஸதா சாரத்தையும் சநாலா பக்கத்திலும் பிரகாசிக்கச் செய்தவர்களுமான பின்வரும் மூவரையும் சிஷ்ய திலகங்களாகக் குறிப்பிடலாம்.

1. மஹாமஹோபாத்யாய ஹரிஹர சாஸ்த்ரிகள்
2. மஹாமஹோபாத்யாய கணபதி சாஸ்த்ரிகள்
3. மஹாமஹோபாத்யாய யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள்

இம்மூவரும் அவரவர் காலத்தில் உயர்ந்த பேராசிரியர் களாகத் திகழ்ந்தார்கள். இம்மூவரும் கும்பகோணத்திலிருந்த அத்வைத ஸபாவுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர்களாக இருந்ததுடன் சாஸ்திர ஞானம் என்னும் ஸாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்திகளாக விளங்கினார்கள். சற்று இளைய தலைமுறையினரான ஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகளும், ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளும் உயர்ந்த கவிதைகள் இயற்றும் இயல்பை அருள் சக்தியாகப் பெற்றிருந்தார்கள். மேலும் வாக்சா துர்யமுள்ள பேச்சாளர்களாகவும், உபன்யாசகர்களாகவும், வாக்யார்த்தங்கள் சொல்வதில் உத்கிருஷ்டமான போதகர்களாகவும் பிரசித்தியடைந்தார்கள்.

பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் தனது குருவான பிதாமஹரின் வாழ்க்கையை ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு சம்புவாக (கவிதையும் உரைநடையும் கலந்து எழுதப்பட்ட காவியம்) எழுதியுள்ளார்கள். பிரம்மஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகளும் ஹ்ருதயத்திலிருந்து கிளம்பும் உத்கிருஷ்டமான குரு பக்தியை வெளிப்படுத்தும் எழபது சுலோகங்கள் அடங்கிய ஸ்ரீ குருராஜ ஸப்ததி என்ற விசேஷமான கவிதையைப் புனைந்துள்ளார்கள்.

அடுத்ததாக நடுக்காவேரி ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரிகள் தனித்தன்மை வாய்ந்த அதிசய புருஷர். அவர் நல்ல பேச்சாளர், பல மொழிகளறிந்தவர், ஒரு கவி, மேலும் பத்திரிகையாளரும் கூட, அக்காலத்தில் ஹிந்து மத்தின் ஆணிவேர்களைப் பிடுங்கி எறியும்வகையில் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டு வேகமாகப் பரவி வந்த கிறிஸ்துவமதப் பிரசாரத்தைத் தனது சக்தி வாய்ந்த பேச்சத் திறமையாலும், சாதுர்யமான எழுத்தாலும் தடுத்து நிறத்த மிகுந்த பிரயாசைப்பட்டார்கள். இதற்காக ஜில்லாவுக்கு ஜில்லா பிரயாணம் செய்து சாதாரண மக்கள் கூட்டங்களில் பல பாஷைகளில் பேசியம் விஷயங்களை எடுத்துக் கூறினார்கள். ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும் எழுதப்பட்ட "பிரம்ம வித்யா" என்ற மாதாந்திரப் பத்திரிகையை அவர் நடத்தி வந்தார். மேலும் சைவ சித்தாந்தத்தையும் அத்வைத தத்துவங்களையும் விளக்கும்

அனேக பெரிய கிரந்தங்களை அச்சேற்றி வெளியிட்டு பிரகாசப்படத்தினார்கள். ஓய்வில்லாமல் குறிக்கோளுக்காக உழைத்தார்கள். மேலும் தென்னிந்தியாவிலிருந்த அரச ஸமஸ்தானங்களில் முக்கிய இடம் பெற்று பிரபலமடைந்தார்கள்.

பொது மக்களை விழிப்படையச் செய்யும் அன்னாரில் முயற்சிகளுக்கு ஸ்ரீ ச்ருங்ககிரி, காஞ்சி மடாதிபதிகளும் ஆதரவு அளித்து வந்தார்கள். ஒரு எழுத்தாளர் என்ற முறையில் அவர் எழுதி வைத்து இருக்கும் கவிதைகள், பாட்டுக்கள் கட்டுரைகள் எண்ணற்றவை. அதிபால்ய வயதிலேயே குருவை வந்தடைந்த அவர் நீண்ட காலம் குருகுல வாஸம் செய்தார். மேலும் குருவுக்கு அத்யந்த பிரிய சிஷ்யராகவும் இருந்து வந்தார். ஒரு சமயம் குரு இந்த சீடனைப் பார்த்து "ஸ்ரீநிவாஸா! "லெக்சர்" என்று நீ ஏதொ அடிக்கடி செய்கிறாயாமே? அப்பவென்றால் என்ன?" என்று கேட்டார்கள். சிஷயன்மிகுந்த லஜ்ஜையுடன் "அது ஒன்றும் விசேஷமில்லை. நன்னெறி, மதம் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் பாமர ஜனங்கள் புரிந்து கொண்டு பயனடைவதற்காகச் செய்யப்படும் உபன்யாசம் தான்" என்று பதிலளித்தா். வடக்கே துங்கபத்ரா நதிக்கரையிலிருந்து தெற்கே தாமிரபரணிக்கரை வரையில் அவரது பெயரே ஒர மந்திரம் போல் சக்தி வாய்ந்ததாக இருந்தது. கிறிஸ்த்துவ மதப்பிரசாரகர்கள் அவரைக் கண்டு பயந்தார்கள். தனது இல்லறத்தில் அவர் ஒரு எளிய தர்மாத்மாவான முனிவர் போல் வாழ்ந்து வந்தார்.

பழமைநேரி சுந்தர சாஸ்த்ரிகள் என்ற மற்றொரு சீடர் ராமநாதபுரம், மைசூர் ஸமஸ்தானங்களில் ஆஸ்தான பண்டிதர்களின் வரிசையில் மிக்க கௌரவமான ஸ்தானத்தை வகிக்கலானார்கள். தன்னிடம் ஏதோ உதவி கேட்டு வந்த ஒரு வரை, ஸ்ரீ சுந்தர சாஸ்த்ரிகளிடம் அனுப்பிய பிரம்மஸ்ரீ சாஸ்த்திரிகள் தனது அறிமுகப் பத்திரிகையில் சீடனை விளிக்கும் ஆசீர்வாத வாக்கியங்களில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

राजस्थानविराजमानधिषणा कौशल्य नैर्मल्यभृत्
कादाचित्कमदन्तिकस्थितिवशात् अन्ते वसन् मामकाः ।
इन्याख्यापित मद्यशाः निपुणधीः सर्वेषु तनत्रेष्वपि
श्रीमान् सुन्दरविद्वदुत्तम दह क्षोव्यांविजेजीयते ।।
आशास्महे तस्य पुरोऽभिवृद्धिं यदाश्रयात् सर्वजनोपकारम्
कर्तु विशिष्य क्षमते स तेषां प्रभूत्तमानामपि मङ्गलानि।।

ராஜஸ்தா2ன விராஜமான தி4ஷணா கௌஶல்ய் நைர்மல்யப்4ருத்
காதா3சித்கமத்3ந்திக ஸ்தி2தி வாத்த3ந்தே வஸன் மாமகா:
இன்யாக்2யாபித மத்3யஶா: நிபுணதீ4: ஸர்வேஷு தந்த்ரேஷ்வபி
ஶ்ரீமான் ஸுந்த3ர வித்3வது3த்தம இஹ க்ஷோவ்யாம் விஜேஜீயதே

ஆஶாஸ்மஹே தஸ்ய புரோऽபி4 வ்ருத்3தி4ம்
யதா3ஶ்ரயாத் ஸர்வஜனோபகாரம்
கர்தும் விஶிஷ்ய க்ஷமதே ஸ தேஷாம்
ப்ரபூ4த் தமானாமபி மங்க3லானி

"தன்னிகரற்ற வித்வானான ஸுந்தார் நான்கு திக்குகளிலம் பிரஸித்தமாயள்ளார். அவரது சாமர்த்தியமும், மேதா விலாஸமும் அரசவைகளை மேலும் பிரகாசிக்கச் செய்கின்றன. என்னிடம் ஸ்வல்ப காலம் தங்கினதை வைத்துக் கொண்டு, தான் என்னுடைய மாணவன் என்று சொல்லிக் கொள்வதால் என்னுடைய கீர்த்தியைப் பரப்பிக் கொண்டிருக்கிறார். அவர் எல்லா சாஸ்த்ரங்களிலும் கரை கண்டவர். அவருக்கு மேலும் மேலும் ஸௌபாக்கியங்கள் விருத்தியாக வேண்டுமென ஆசீர்வதிக்கிறோம். எந்த அரசருடைய உதவியுடன் ஸுந்தரர் எண்ணற்ற ஜனங்களுக்கு நன்மைகள் செய்விக்கின்றாரோ அந்த அரசருக்கும்

ஆண்டவனின் பூர்ணமான அருள் ஸித்திகட்டும்".

பிரக்யாதியுடன் விளங்கிய பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் மற்ற சிஷ்யர்களின் வரிசையில் பிற்காலத்தில் புதக்கோட்டை ஸமஸ்தானத்தில் ஆஸ்தான வித்வானாக ஏற்றுக் கொள்ளப்பட்டு வரும், ஸ்ரீ கோபாலாச்சாரியாரின் குமாரருமான ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியாரைக் குறிப்பிடலாம். வேங்கடகிரி மஹாராஜானால் ஆதரிக்கப்பட்ட திருப்பதி வேங்கட ஸுப்ரமணிய சாஸ்த்ரிகளையும் மற்றும் ஆந்திர ஜில்லாவக்களில் தலைசிறந்த பண்டிதர்களாக விளங்கினவர்களில் ஒருவரான மல்லாரி ராமகிருஷ்ண சாஸ்த்ரிகளையும் இங்குக் குறிப்பிடலாம். தவிர சிறந்த பேச்சாற்றலுள்ளவனும், குருகுலவாசம் செய்த சிறுவர்களில் குருவின் அன்பிற்கும் பாசத்திற்கும் பாத்திரமாகவும், பிற்காலத்தில் நன்றாக பிரகாசிக்கக் கூடியவன் என்ற நம்பிக்கையைக் கொடுத்தவனுமான சந்திரசேகர சாஸ்த்ரிகள் என்ற இளைஞனையும் குறிப்பிட வேண்டும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இச்சிறுவனுக்கு பெரியம்மை போட்டி குருவின் கிரஹத்திலேயே, இவனது வாழக்கை மிக இளவயதிலேயே துண்டிக்கப்பட்டுவிட்டது.

ஸந்நியாசாச்ரமத்தில் இருந்து கொண்ட சிஷ்யர்களாகப் படித்து வந்தவர்களில் முக்கியமாக மிகவும் மரியாதைக் குரியவராக இருந்த மஹாதேவ ஆச்ரமியைக் குறிப்பிட வேண்டும். இவர் ஆழ்ந்த பரந்த கல்விஞானம் உள்ளவராகவும் தனது துரியாச்ரமத்தில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளை இம்மியளவு பிசகாமல் கண்டிப்பாக அனுஷ்டித்து வந்தவர் என்றும் எல்லோராலும் போற்றப்பட்டார். மற்றும் பிரம்மானந்தஸ்வாமி என்பவர் உபதேசங்களின் மூலமும், எழுதுவதின் மூலமும் "அத்வைத"க் கொள்கையைப் புரிய வைப்பதில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு காசியில் வசித்து வந்தார். சேந்தமங்கலம் அவதூத ஸ்வயம்பிரகாச ஸ்வாமிகள், பிரம்மானந்த ஸ்வாமிகளின் சிஷ்யர்களில் ஒருவராவார்.

இவர்களைத்தவிர, அடுக்கு மொழிகளில் ரஸமாகத் தமிழில் ஸ்ரீமத் ராமாயணம் சொல்வதில் பிரசித்தியடைந்திருந்த பருத்தியூர் கிருஷ்ண சாஸ்த்ரிகள், தர்மசாஸ்திரம் த்ருஸ்கந்தஜ்யோதிஷம் முதலியவற்றில் முதிர்ந்த தேர்ச்சி பெற்றிருந்த மருத்துவக்குடி சாமி சாஸ்த்ரிகள், மேலும் அவரவர்கள் எடுத்துக் கொண்ட துறைகளில் விசேஷமான ஆற்றல் பெற்றிருந்த வித்வான்கள் பலரும் கூட, சாஸ்த்ரிகளிடம் பாடம் கேட்டேன் என்பதே தங்களுக்குப் பெருமை என்று சிறிது காலமாவது அவர்களிடம் சிஷ்யர்களாக இருந்தனர். அனேக ஸந்நியாசிகளும், எண்ணற்ற வைஷ்ணவர்களும் சாஸ்த்ரிகளின் சிஷ்யக் கூட்டத்தில் சேர்ந்து கொண்டே இருந்தார்கள். குறிப்பாக மன்னார்குடியை ஒட்டினாற்போல் இருக்கும் ச்யேனாங்குளம் (தற்போது சேரங்குளம் என்று வழங்கப்படவது) கிராமத்திலிருந்து வைஷ்யணவர்கள் சாஸ்த்ரிகள் நடத்தும் வகுப்புகளில் மிகுந்த ஆர்வத்துடனும் வந்து கலந்து கொள்வார்கள். அதேபோல் அக்ரஹாரத்தில் வசித்த உள்ளூர்வாசிகளும் தாராளமாக அள்ளி விநியோகிக்கப்படும் அறிவு வெள்ளத்தைப் பருக வெளியூர்களிலிருந்து வந்திருக்கும் சிஷ்யர்களுடன் போட்டி போட்டுக் கொண்டு தாங்களும் கலந்து கொண்டு பயனடைந்தார்கள்.

வித்யையாகிற புஷ்பங்கள் மலருவதற்கான, மாறபாடு இல்லாமல் நிரந்தரமான வஸந்த காலமாகத் திகழ்ந்தது சாஸ்த்ரிகளின் காலம். இந்த அறிவ மலர்ச்சி, வகுப்பு அறைகளாகிற நன்கு பாதுகாக்கப்பட்ட நந்தவனங்களில் மாத்திரம் என்பதிலில்லாமல், நாலா பக்கத்திலும் வேலிகளிலும், புதர்களிலும் கூட விகஸித்தது என்றால் மிகையாகாது. தென்இந்தியாவில் மன்னார்குடி அரை நூற்றாண்டுக்கு மேல் பிரசித்தமான வித்யாபிடமாகத் திகழந்ததோடல்லாமல், இந்தியாவின் பல பாகங்களுக்கும் ஆற்றல்மிக்க வித்வான்களையும், நன்னெறி, புனித நம்பிக்கையுள்ள மனித ரத்னங்களையும் அனுப்பி வைத்த பெருமையையும் அடைந்தது.

ஞானப்பிழம்பாகிய சூரியன் மத்தியில் இருந்து கொண்ட ஜாஜ்வல்யமான தனது கிரணங்களால் முடிவில்லாத பூப்பிரதேசங்களை ஒளி வெள்ளத்தில் மூழ்கடித்துக் கொண்டிருந்தான் என்று சொல்லுவதே பொருத்தமாகும்.

## ஏழாவது அத்தியாயம்

## வளரும் கீர்த்தியும், பட்டமளிப்பும்

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களின் வாழ்நாட்களின் பிற்பகுதியில் எல்லா வகுப்பைச் சேர்ந்தவர்களும், எல்லா நிலையில் இருந்தவர்களும் தங்கள் தங்கள் புனித யாத்திரையில் தரிசிக்க வேண்டிய மஹா புருஷர்களில் ஒருவராக சாஸ்த்ரிகளைக் கருதி வந்தார்கள். ஜனங்கள் சாஸ்த்ரிகளைக் குறிப்பிடப் பெயர் சொல்லமாட்டார்கள். "பெரியவாள்" என்றே குறிப்பிடும் அளவுக்கு அவர்களிடம் மரியாதை பயபக்தி ஏற்பட்டிருந்தது. வெகு தூரத்திலிருந்தும், அருகிலிருந்தும் பெரியவாளைத் தரிசனம் செய்து அவர்களோடு இரண்டு வார்த்தை பேசி ஆசீர்வாதம் பெற்றுப்போக எண்ணி, அதற்காக ஒதுக்கப்பட்டிருந்த மாலை நேரத்திற்காகக் கையில் தட்டு நிறையப் பழங்கள், கல்கண்டு முதலியவைகளுடன், ஜனங்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். இம்மாதிரிப் "பார்வையாளர்கள்" வராத தினமே இருந்ததில்லை. இம்மாதிரி தரிசனம் கொடுக்க வேண்டிய நேரங்களில் "இவ்வளவு பேர் வந்து எனக்கு மரியாதை செலுத்திவிட்டுப் போகுமளவுக்கு நான் என்ன சாதித்திருக்கிறேன்? எனக்குண்டான ஸ்வதர்மத்தை என்னால் முடிந்த அளவு கடைப்பிடிக்கிறேன் என்பதைத் தவிர வேறு என்ன தகுதி எனக்கெற்பட்டிருக்கிறது? என்று அடிக்கடி தனக்குள்ளேயே சொல்லிக் கொள்வார்கள்.

தனது பெரும் புகழ் பெற்ற முன்னோரான ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர் அவர்களைப் போல தான் பொதுவான நற்பணி என்று ஏதும் செய்யவில்லையே என்று மிகவும் வருந்துவார்கள். ஸ்ரீ தீக்ஷித நவரத்னமாலிகா" என்று சாஸ்த்ரிகள் செய்திருக்கும் செய்யுள் காவ்யத்தில் இந்த எண்ணம் பிரதிபலிப்பதைக் காணலாம்.

प्रबन्धशत निर्मितिः प्रथितमग्निहोत्रादिकं
श्रुतप्रवचनादयः श्रितजनावनाथ प्रभोः ।
सभांप्रतिगतागतं समुदितं मखीन्द्रेषुनः
कियत्यलसता सतामपि ततः परेषां भुवि ।।

ப்ரப3ந்த4ஶத நிர்மிதி: ப்ரதி2தமக்3னிஹோத்ராதி3 கம்
ஶ்ருதப்ரவசனாத3ய: ஶ்ரித ஜனாவநாத2 ப்ரபோ4: |
ஸபா4ம்ப்ரதிக3 தாக3 தம் ஸமுதி3 தம் மகீ2ந்த் ரேஷு ந:
கியத்யலஸதா ஸதாமபி தத: பரேஷாம்பு4வி ||

"லோகப் பிரஸித்தமாக இருந்த ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதவர்கள் நூறு க்ரந்தங்கள் எழுதினார்கள். கிருஹஸ்தனுக்கு வதிக்கப்பட்டிருக்கும் அக்னிஹோத்திரம் முதலிய கர்மாக்களை ஸம்பூர்ணமாய் அனுஷ்டித்தார்கள். சாஸ்திரங்களை விளக்கி உபதேசங்கள் செய்தார்கள். அரச சபைகளில் அடிக்கடி பங்கு கொள்வதன் மூலம் கஷ்டங்களினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு நிவாரணமும் தேவையான பாதகாப்பும் தேடிக் கொடுத்தார்கள். அப்பெரியாரின் வம்சாவழி வந்த நாமோன்றால், கஷ்டம்! ஒவ்வொரு விஷயத்திலும் கேவலம் அலக்ஷ்யமும், சோம்பலுமுள்ளவராக நமது வாழ்நாட்களைக் கடத்திருயிகிறோம்".

விக்டோரியா மஹாராணியார் பிரிட்டிஷ் அரசியாக முடி சூட்டிக்கொண்ட பின் 25வது வருடமான கி.பி. 1887ல் அதற்காக

வெள்ளிவிழாக் கொண்டாடினார்கள். சாஸ்திரங்களில் பரிச்சயத்தைப் பரவலாக்குவதோடு மேலும் ஆய்வுகள் செய்யும் பண்டிதர்களை தக்க முறையில் கௌரவிப்பது என்றிருந்த ஹிந்துக்களின் பழைய ஸம்பிரதாயத்தை "மஹாமஹோபாத்யாய" என்ற பட்டமளிப்பதன் மூலம் திரும்பவும் அனுஷ்டானதிற்குக் கொண்டுவர, அரசாங்கம் இந்த விழாவை ஒரு நல்ல சந்தர்ப்பமாக உபயொகித்துக் கொண்டது. இப்படி கௌரவப்படுத்துவதற்காக வடநாட்டில் ஒரவரும் தென்னாட்டில் ஒருவருமாக இரண்டு மஹாவித்வான்கள் தேர்ந்து எடுக்கப்பட்டார்கள்.

இது பற்றி வெளிவந்த அரசாங்கக் குறிப்பு பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் கவனத்திற்குக் கொண்டுவரப்ட்டாபோது அவர்கள் தனக்குத் தானே இப்படி முணு முணுப்பாகச் சொல்லி கொண்டார்கள். இந்தப் பட்டம் மல்லிநாதஸூரி போன்ற மஹா வித்வான்களை அலங்கரித்தது வழக்கத்தில் இருந்தது. நான் எப்படித் தகுதியாவேன்!" இந்த விஷயம் இப்படியே விடப்பட்டது. கூட இருந்தவர் யாரும் பெரியவாளை தாங்கள் தஞ்சாவூர் கலெக்டரின் தர்பாருக்குச்சென்று அதற்காக சடங்குகளுடன், பட்டத்துக்கான அடையாள மெடலைப் பெற்று வரவேண்டுமென்ற விபரத்தைத் தெரிவிக்கத் துணியவில்லை. சாஸ்த்ரிகளின் வருகைக்குப் பல மாதங்கள் காத்திருந்த பிறகு தஞ்சாவூர் கலெக்டர் அவர்கள் அந்தப் பட்டத்திற்கான அடையாளங்களைப் பெரியவாளின் வீட்டிற்குத் தானாகவே அனுப்பி வைத்தார்கள். இப்படியாக எந்தவித ஆடம்பரமோ ஸம்ப்ரமமோ இல்லாமலும், சாஸ்த்ரிகளின் அன்றாட தினசரியைகளுக்கு எந்தவிதமான இடைஞ்சலும் ஏற்படாமலும் அந்தப் பட்டம் பெரியவாளை வந்தடைந்தது.

சாஸ்த்ரிகள் மிக எளிமையானவராகவும், பரிசுத்தமான ஜ்வபாவமுள்ளவராகவும், பிரம்மத்தியானத்தில் முழு மூச்சுடன் ஈடுபடுவதனால் அக்ஙாகரத் திவலைகூட இல்லாமலும் தான் என்ற நிலை தலை காட்டாமலும் வாழ்ந்து வந்தார்கள். வாழ்நாளில் அவரது கடமைகளை, பெருமைக்கோ

பிரயோஜனத்திற்கோ அல்லாமல் நிறைவேற்றி வந்தார்கள். இவைகள் பெரியவாளைத் தேடிவந்த பொழுதோ, அவர்கள் அவைகளைப் பொருட்படுத்தியதில்லை. உண்மையான மனத்திருப்தியுடனும் இம்மியும் பிசகாத சமநிலையைக் கடைப்பிடிப்பவராய்த் தனது கடமை தருமங்களில் மாத்திரம் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்த சாஸ்த்ரிகள் வானளாவிய மலைச்சிகரம் போல் உன்னதமாகவும், த்ருடமாகவும் இருந்து கொண்டு பாமர உலகத்தைச் சார்ந்த மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இவைகளைக் கடந்த மஹானாகத் திகழ்ந்தார்கள். கடும் புயலோ, பேய் மழையோ அவர்களது ஆழ்ந்த சாந்த நிலையைக் கலைத்ததும் இல்லை. அவர்களின்பால் நிரந்தரமாக ஜ்வலிக்கும் ஸூர்ய ஒளியை மறைத்ததும் இல்லை. பெரியவாள் ஆச்சர்யப்பட்டோ, உரக்கச் சிரித்தோ, மனதுடைந்து துக்கத்தில் ஆழ்ந்தோ, பிறருடன் கோபத்தைக் காட்டிப் பேசியோ அல்லது பிறரை நோகும்படி சீண்டியோ யாரும் பார்த்தது இல்லை. சூர்ய-சந்திரர்களைப் போல கடுமையான தரும நெறிகளால் கட்டுப்படுத்தப்பட்ட தனது வாழ்க்கைப் பாதையை செவ்வென பின்பற்றினார்கள். சுருங்கச் சொல்லின் அவர்களது வாழ்க்கையே "அஹத்தை" - தன்னைத்தானே கர்மாக்களினாலும் ஞானத்தினாலும், உய்வித்துக் கொள்வதற்காகவே ஏற்பட்ட சாதனமாக இருந்தது.

சராசரி க்ருஹஸ்தனக்குள்ள பொருள் சம்பந்தமான கவலையோ, பொறுப்புகளோ அவர்களை அண்டினதில்லை. பணப்பெட்டி என்று எதையும் வைத்துக் கொண்டதோ அல்லது சாவிக்கொத்தைச் சுமந்ததோ அறவே இல்லை. ஒரு போதும் காசு பணத்தை எண்ணினதோ அல்லது கணக்கு வழக்குகளில் கொஞ்சம்கூடத் தன்னை ஈடு படுத்திக் கொண்டதோ இல்லை.

சலனமற்ற உயர்ந்த ஆத்மாவாக இருந்த போதலும் நுட்பமான ஹாஸ்ய உணர்வு அவர்களுக்குண்டு. எப்பொழதும் சந்துஷ்டியும் பெருந்தன்மையான தோற்றத்துடன் கூடிய பெரியவாளுக்கு அதேசமயம் அன்பு, அமைதி, ஹிதம் முதலிய

குணங்கள் ஸ்வபாவிகமாகவே அமைந்திருந்தல் அவர்கள் பிறரிடம் காட்டும் உபசாரப் பண்பு விசேஷமாக இருக்கும். சாஸ்த்ரிகளுக்க இரண்டு பெண்கள் மாத்திரம் இருந்தனர். துர்பாக்கியவசமாக இரண்டாவது மாப்பிள்ளையாக அமைந்தவர் கட்டுப்பாடு இல்லாத வாழ்க்கை நடத்தி கொண்டிருந்தார். சுயக்கட்டுப்பாடுடன் இருக்கும் எவரும் இப்பப்பட்டவரின் நடவடிக்கைகளினால் இடிந்து போய் விடுவார்கள். ஆனால் பண்பாளர்களான பெரியவாளில் உதடகளின் இடுக்கினால்கூட இதுபற்றி ஒரு கடும் சொல்லோ வருத்தமோ வெளிவந்ததில்லை.

அதேசமயம் அந்த மாப்பிள்ளையைக் குறிப்பிட நேர்ந்தபொழுதுகூட அந்த உறவுக்குகந்த மரியாதையான பன்மை மொழியிலேயே பேசுவார்கள். குல வழக்கப்படி நடந்து கொள்ளாத ஒரு சிறுவனோ அல்லது வெகு தூரத்து உறவு சொல்லிக் கொண்டு வரும் ஒரு வாயாடிக் கிழவியோ கூட பெரியவாளிடம் தடையின்றி நெருக்கமான பரிச்சயமுள்ளவர்கள் போலப் பேச முடியும். எல்லோருடனேயே அவர்கள் பொதுவாக, பண்பு, அன்பு, கருணையுடன் பழகுவார்கள். பெரியவாளின் நெருங்கிய உறவினர்களுக்கிடையேயுள்ள குடும்பச் சச்சரவுகள் சில சமயம் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டபொழுது தகர்க்க முடியாத மௌனம் தான் அதற்கு மறு மொழியாயிருக்கும். உரக்க உஷ்ணமாக சண்டை போட்டவர்கள் தாங்களாகவே ஆறக்குளிர்ந்து சீக்கிரமே ஆத்திரம் தெளிந்தவர்களாகத் திரும்பி விடுவார்கள்.

பழைய கால வழக்கப்படி வருடம் தோறும் "காமன்" பண்டிகைக்காக ஏற்றப்பட வேண்டிய கொடியின் நிறம்கருப்பாக இருக்க வேண்டுமா அல்லது சிகப்பாக இருக்கலாமா என்பதைப் பற்றி ஒர கிராம மக்களிடம் சர்ச்சையொன்று ஒரு சமயம் கிளம்பி அதைப் பெரியவாளிடம் கேட்டுத் தீர்த்துக் கொள்வது என்று வந்தார்கள். அவ்வமயம் பெரியவாள் பூஜையில் அமர்ந்திருந்தார்கள். வீட்டு வாசலில் இருந்த அவரது சிஷ்யர்கள் வந்திருந்த கிராம மக்களிடம் வேடிக்கைக்காக சிறிது நேரம்

அளவளாவிவிட்டு இந்த அற்ப விஷயத்திற்கெல்லாமா பெரியவாளைத் தொந்தரவு செய்கிறது? என்று கேட்டு திரும்பியனுப்பிவிட்டார்கள். பெரியவாள் பூஜை முடித்து வெளி வந்தவுடன் வாசலில் பேச்சரவம் கேட்டதே என்ன என்று விசாரித்தார்கள். விவரம் தெரிந்து கொண்ட உடனே நற்காரியங்கள் செய்வதில் சிரத்தையாக ஈடுபடுபவர்களிடம் சிஷ்யர்கள் காட்டின அலஹ்யத்தைக் கண்டித்தார்கள். சிவரஹஸ்யம் என்னும் கிரந்தத்தில் இந்த மாதிரி உத்ஸவாதிகளில் சிகப்புக்கொடி ஏற்றவேண்டுமென அதிகார பூர்வமான குறிப்புகள் உள்ளனவே! ஏமாற்றத்துடன் திரும்பின அந்த சிரத்தை மிக்க ஜனங்களைப் போய் உடனே தேடிக் கண்டுபிடித்து சரியான பதிலைச் சொல்லிவிட்டு வாருங்கள் என்று கட்டளையிட்டார்கள்.

## எட்டாவது அத்தியாயம்

# அதிகார பூர்வமான விளக்கத்திற்குக் கடைசியாகத் தேடிப்போக வேண்டியவர்

விதம் விதமான கலைகளிலும் விஞ்ஞானத்திலும் விசேஷத் தேர்ச்சி பெற்றிருந்த வல்லுனர்கள் தாங்கள் பயின்ற வித்தைகளில் தாம் வளர்த்துக் கொண்டிருக்கும் சாமர்த்தியத்தைப் பெரியவாளின் முன்னிலையில் காட்டுவதற்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கவேண்டி மிகுந்த வணக்கத்துடன் பிரார்த்தித்துக் கொள்வார்கள். தனது கந்தர்வ சாரீரத்தாலும், ஸங்கீதக் கலையில் நுண்ணறிவு, சாமர்த்தியம், மேதா விலாஸம், மனோதர்மம், இவைகளில் எவராலும் மிஞ்சமுடியாதவராக ஏன் சமமான இடத்தைக் கூட பிடிக்கக்கூடிய போட்டியாளர் இல்லாத வராகவும் அக்காலத்தில் (ஏன், பிற்காலத்தில் கூட அவருக்கு சமமாகச் சொல்லக் கூடியவர் எவரும் இன்னும் தோன்றவில்லை

என்பது நிச்சயம்) தலைசிறந்த ஸங்கீத வித்வான் மஹாவைத்யநாத சிவன் அவர்கள் மன்னார்குடிக்குத் தொழில் முறையில் வரும் ஒவ்வொரு வமயமும் பெரியவாளின் வீட்டிலும் ஒரு கச்சேரி செய்வது என்று உறுதியாக வைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஸங்கீதக்கலையைத் தான் ஒரு தொழிலாக உபயோகப்படுத்திக் கொள்வதற்குப் பிராயச்சித்தம் அதைப் பெரியவாளுக்கு இப்படி அர்ப்பணிப்பது தான் வழி என்று எண்ணினார்கள். பெரியவாள் வீட்டில் நடத்தும் கச்சேரிகளில் நாயன்மார்களின் சரித்திரத்தை ஸங்கீதத்தைக் கலந்து கையால்வார்கள். லௌகிகமான ஸங்கீதத்திற்கு பக்தி பூர்வமான விஷயங்களை ஸாஹித்தியங்களைப் பயன்படுத்தி, ஸந்நிதி சூழ்நிலைக்குப் பொருத்தமாகத் தனது கலையை நன்கு மாற்றி அமைத்துக் கொள்வார்கள் என்றே சொல்லலாம்.

இவரது தமையனார், தனித்திறம் பெற்ற வித்வானும், கீர்த்தனங்கள் இயற்றும் திறமையுள்ளவருமான ஸ்ரீ ராமசேஷ சிவனும், மஹா வைத்தியநாத சிவன் செய்யும் ஸங்கீத உபந்யாஸங்களில் உதவுவார். இம்மாதிரி கச்சேரி/உபந்யாஸ நிகழ்ச்சிகள் நடக்கும் காலங்களில், வீடு கூட்டத்தினால் நிரம்பி வழியும். இப்படிக் கணிசமாகக் கூடும் ஜனங்களின் பொதுவான ருசிக்கு மதிப்பு கொண்டு சாஸ்த்ரிகளும் கச்சேரி நிகழ்த்துபவரை ஸங்கீதத்திற்கு முக்கியத்துடம் கொடுத்துப் பாடுங்கள் என்று சிபாரிசு செய்வதுமுண்டு.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோவில் வருஷாந்திர உத்ஸவ காலத்தில் சாஸ்த்ரிகள் அவர்கள் திருவாரூரில் இருந்த சமயம் மிக்கப்பிரஸித்தியடைந்திருந்த திருவாரூர் ஞானம் என்ற புகழ் பெற்ற பரதநாட்டிய கலைஞர் தன்னுடைய நிகழ்ச்சிக்கு வருகை தந்து தன்னை கௌரவிக்க வேணும் என்று கேட்டுக் கொண்டாள். பயபக்தியுடனும், உண்மையான மனோபாவத் துடனும் தன் கலை நிகழ்ச்சியைக் காண அழைக்கும் எவருடைய

அன்பு அழைப்பையும் சாஸ்த்ரிகள் மறுதளிப்பதில்லை. அகங்காரம் அல்லவோ மறுக்கத் தூண்டும்? சாஸ்த்ரிகளிடம் தான் துளிக்கூட அகங்காரம் இருக்கவில்லையே! ஞானத்தின் நாட்டிய நிகழச்சிக்கு ஒரு நாள் சென்றமர்ந்தார்கள். ஞானமும் கிருஷ்ண கர்ணாமிருதத்திலிருந்து இரண்டொரு சுலோகங் களுக்கு அன்று அபிநயம் பிடித்துக் காட்டினாள். அவளது நிகழ்ச்சி மிகவும் ஆனந்தத்தைக் கொடுப்பதாக அமைந்தது. சாஸ்த்ரிகளும் மனம் விட்டு தன்னுடைய பாராட்டுக்களைத் தகுந்த வார்த்தைகளால் வெளிப்படுத்தினார்கள்.

வித்வான்கள் தங்களுக்குள் ஏற்படும் சர்ச்சைகளை சாஸ்த்ரிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டு அவர்களை மத்யஸ்தராக இருந்து எவருடைய வாதம் சரியானதென்று தீர்ப்பு அளிக்கும் படி அடிக்கடி பிரார்த்தனை செய்து கொள்வார்கள். அப்படியே சாஸ்த்ரிகளும் இரு வாதங்களையும் பரிசீலித்துத் தன் தீர்ப்பை வழங்குவார்கள். முக்கியமான விஷயங்கள் ஸம்பந்தப்பட்ட விவகாரங்களில் சாஸ்த்ரிகள் தனது தீர்ப்பை தக்க காரணங்களுடன் எழுதியே கொடுத்து விடுவார்கள்.

பஞ்சாங்கம் கணிப்பதற்கு த்ருக்கணித முறையையே அனுசரிக்க வேண்டுமென்பதில் தீவரமான கொள்கையுள்ளவர் திருவையாறு ஸ்ரீ சுந்தரரேச சிரௌதிகள். இதற்கு நேர்மாறாக இருக்கும் வாக்கிய கணித முறையையே கொள்ள வேண்டுமென்பதில் தீவிரவாதியாக இருந்தவர் கருங்குளம் ஸ்ரீ கிருஷ்ண ஜோஸ்யர் அவர்கள். இந்த விவகாரத்தில் ஒரு நிர்ணயம் பெற இருவரும் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் முன்னிலையில் விவாதிக்கலானார்கள். இவர்களது வாதப்பிரதி வாதங்கள், எடுத்துக்காட்டாகப் பல திதி நிர்ணயங்களைக் குறித்துக் காட்டுவது முதலியன பல தினங்கள் தொடர்ந்து நடைபெற்றன. த்ருஸ்கந்த ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் கரை கண்டவர் என்று பிரஸித்தியடைந்திருந்த மருத்துவக்குடி ஸாமி சாஸ்த்ரிகள் பெரியவாளால் அழைக்கப்பட்டு அந்த விவாதங்களில் கலந்து கொண்டார்.

சாஸ்த்ரிகள் முடிவில் தனது தீர்ப்பைச் சொல்லுங்கால், த்ருக்கணிதமாகிற புது முறையின் விஞ்ஞான பூர்வமான துல்லியத்தை வெகுவாகப் புகழ்ந்து வான சாஸ்திரம் ஜ்யோதிஷ சாஸ்திர விஷயங்களிலும் யாதார்த்யமான பலன்கள் கொள்வதற்கு உதவியாக அம்முறையைப் பயன்படுத்தலாம். ஆனால் வேதோக்தமான கர்மாக்களையோ, சடங்குகளையோ செய்வதற்கான திதிகளை நிர்ணயிக்கும் விஷயத்தில் காலங்காலமாக அனுசரிக்கப்பட்டு வரும் வாக்கிய கணித முறையைக் கைவிடவதற்கு தனக்கு முகாந்திரம் ஏதம் இல்லையென்று தெரிளவாக்கினார்கள்.

வரஹூர் கிருஷ்ணஸ்வாமி ச்ரௌதிகள் ஸாம வேதத்தைக் கானம் செய்ய வழக்கத்திலிருக்கும் பழைய முறையைத் தூக்கி எறிந்து விட்டு, ஹார்மோனியத்தைப் பக்க வாத்தியமாக வைத்துக் கொண்டு பாடும் தான் கண்டு பிடித்திருக்கும் புத முறையை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வர வேண்டுமென்று அம்முறையில் பாடிக் காட்டினார்கள். சிரௌதிகளின் இந்தப் புதுமுயற்சி பெரியவாளின் ஆமோதிப்பைப் பெறவில்லை. இருந்தும் பெரியவாள் சிரௌதிகளின் புதுமுறை கானத்தைப் பூராவாகக் கேட்டதோடு, சிரௌதிகளுக்கு ஆய்வில் உள்ள தீக்ஷிண்ய புத்தியையும், இதற்காக அவர் புராதனமான ஸாமகான முறைகளைக் கண்டெடுப்பதற்காகச் செய்த முயற்சிகளையும் வெகுவாகச் சிலாகித்தார்கள்.

தர்மசாஸ்திரம் ஆசாரம் இவை சம்பந்தமான கேள்விகள் தான் அடிக்கடி பெரியவாளின் முன் தீாப்புக்காகத் தெரிவிக்கப்படும். சிக்கல் மிகுந்த விஷயமாயிருந்தால், பெரியவாளே தர்ம சாஸ்திரத் துறையில் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்த மருத்துவக்குடி பிரம்மஸ்ரீ ஸாமி சாஸ்த்ரிகளையும் கலந்து கொள்வது வழக்கம்.

சில சமயங்களில் நீதிபதிகளும், வழக்கறிஞர்களும் கூட ஹிந்துக்கள் சட்டம் சம்பந்தமான விஷயங்களில் வல்லுனர்களின் ஆலோசனை தேவைப்பட்டபோது சாஸ்தரிகளிடம் கேட்டறிந்து தெளிவார்கள். புத்தகாசிரியர்களும் பதிப்பாசிரியர்களும் தங்கள் புத்தகத்திற்குப் பெரியவாளிடமிருந்து சிலவாரிகளாவது சிலாகித்து முன்னுரை பெறுவதைத் தங்களுக்குக் கிடைக்கக்கூடிய பெரிய கௌரவமாக எண்ணினார்கள். தவிர, அங்கங்கே நடக்கும் ஸத்கார்யங்களைப் பற்றி பத்திரிகை வெளியிட வேண்டி சாஸ்த்ரிகளின் அனுக்ரஹம் கேட்டு வந்தவர்கள் எல்லோருக்கும், அக்காரியங்களின் மேம்பாட்டைச் சிலாகித்து எண்ணற்ற "அபிநந்தனப் பத்திரிகை" களும் கொடுத்துள்ளார்கள்.

தன் மத சம்பந்தமான க்ரந்தங்களில் நல்ல தேர்ச்சி யடைந்திருந்தவரும், மன்னார்குடியில் கலெக்டராக இருந்த வருமான ஒரு முகம்மதியர்ா ஒரு சமயம் சாஸ்த்ரிகளைச் சந்திக்க தான் விரும்புவதாகச் சொல்லியனுப்பினார். அப்படியே அனு மதியளிக்கப்பட்டு கலெக்டர் சாஸ்த்ரிகளைச் சந்தித்தபோது, சாஸ்த்ரிகள் கலெக்டரிடம் முகம்மதிய மதத்தின் அடிப்பதைத் தத்துவங்களைப் பற்றி விசாரித்து அறிந்து கொண்டு, எல்லா மதங்களிலுமுள்ள ஒற்றுமைகளைப் பற்றி விசேஷமாகக் குறிப்பிட்டுவிட்டுத் தனது முடிவுரையில் மோக்ஷத்தை வேண்டும் மனிதனுக்கு, தான் பிறந்த மதத்திலே உண்மையான, த்ருடமான நம்பிக்கை வைத்திருப்பதுதான் முக்கியத் தேவை என்றும் விளக்கினார்கள்.

பேராசிரியர் மாக்ஸ்முல்லர் அவர்களை யாரோவொருவர் தாங்கள் இந்தியாவின் பழையகாலப் பெருமைகளைப்பற்றிக் கணக்கற்ற புத்தகங்கள் எழுதியிருந்தும் இதுவரை இந்திய மண்ணைத் தாங்கள் மிதித்ததுகூட இல்லையென்பது விநோதமாக இருக்கிறதல்லவா என்று கேட்டதாகவும், அதற்கு அந்த மேனாட்டுப் பேராசிரியர் "எனக்கு இந்தியாவில் என்ன வேலை இருக்கிறது? அப்படி நான் அங்கு போய்வர

விரும்புவதானால் அது மன்னார்குடியில் வசிக்கும் பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளைச் சந்திப்பதற்கு மாத்திரம் தானிருக்க முடியும்” எனப்பதிலளித்த தாகவும் சொல்லப்படுகிறது.

சாஸ்த்ரிகள் புகைப்படம் எடுத்துக் கொள்வதற்கு முதலிலெல்லாம் இசையாமல் தானிருந்தார்கள். ஆனால் பிற்காலத்தில் அவர்களுடைய புகைப்படம் தங்களுக்கு வேண்டுமென ஜனங்கள் இறைஞ்சிக் கேட்டுக் கொண்டதின் பேரில் ஒப்புக் கொண்டார்கள். பல சந்தர்ப்பங்களில் அவர்களுடைய புகைப்படங்கள் எடுக்கப்பட்டு அவற்றின் மறுபதிப்புகள் பெரியவாளின் உறவினர்கள், சிஷ்யர்கள், மேலும் பெரியவாளிடம் நன்மதிப்புக் கொண்டவர்கள் முதலியவர்களின் வீடுகளை அலங்கரித்தன.

ஸ்ரீமத் ராமாணயனத்தில் வால்மீகி முனிவர் ஸ்ரீ ராமனைப் பற்றிச் சொன்ன விஷயம் சமீப காலத்தில் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் விஷயத்தில் பொருத்தமாகவிருந்தது என்று குறிப்பீடுகிறார் ஸம்ஸ்க்ருதத்தில் இந்த வரலாற்று ஆசிரியரான ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள்.

यथा त्रेतायुगे रामो राम इत्यवदन् जनाः ।
तथाऽमीषां गुणान् सर्वे गुणन्तिस्म कलौ जनाः।।

யதா[2] த்ரேதா யுகே[3] ராமோ
ராம இத்யவத[3] ஜனா: |
ததா[2]ऽமீஷாம் கு[3]ணான்
க்[3]ருணந்திஸ்ம கலௌ ஜனா: ||

“த்ரேதாயுகத்தில் எப்படி ஜனங்கள் ராம, ராம என்று சொல்லிக் கொண்டேயிருந்தார்களோ அவ்விதமே இக்கலியில் ஜனங்கள் பெரியவாளின் குணாதிசயங்களை ஸதா ஸர்வ காலமும் புகழ்ந்த வண்ணம் இருந்தார்கள்”.

நாமும் வால்மீகி முனிவரின் வார்த்தைகளையே இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

यश्च रामं न पश्येत्तु यं च रामो न पश्यति ।

निन्दित: स भवेल्लोके स्वात्माऽप्येनं विगर्हति ।।

யஶ்ச ராமம் ந பஶ்யேத்து
    யம் ச ராமோ ந பஶ்பதி |
நிந்தி$^{3}$ த: ஸ ப$^{4}$ வேல்லோகே
    ஸ்வாத்மாऽப்யேனம் விக$^{3}$ர் ஹதி ||

"யார் ஸ்ரீ ராமனைப் பார்க்கவில்லையோ, யாரை ஸ்ரீராமன் பார்க்கவில்லையோ அவன் உலகில் நிந்தனைக்குரியவனாவான். அவனது ஆத்மாவே கூட அவனை அலக்ஷியம் செய்யும்".

இந்த ச்லோகத்தில் ஸ்ரீராமன் என்ற பெயருக்குப் பதில் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் பெயரைச் சேர்த்து விட்டால் இவை முற்றிலும் "பெரியவாள்" காலத்தில் வாழ்ந்த ஜனங்கள் பெரியவாள்பால் வைத்திருந்த அன்பையும் மரியாதையையும் விளக்குவதற்குப் பொருத்தமானதாகும்.

## ஒன்பதாவது அத்தியாயம்

## யாகம், புத்திர ஸ்வீகாரம், தகப்பனார் மறைவு

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் ஒரு யாகம் செய்யவேண்டுமென எண்ணினார்கள். தான் யாஜகர்கள், தீக்ஷிதர்கள் இவர்களின் வம்சத்தில் வந்தவர் என்ற காரணத்தாலும், சாஸ்திரங்களில் ஒவ்வொருவரும் யாகம் செய்யவேண்டுமென்பதைப் பற்றி சந்தேகத்நிற்கிடமின்றிக் கூறப்பட்டிருப்பதையும் மனதில் கொண்ட, இதைத் தனக்கு விதிக்கப்பட்டிருக்கும் கடமைகளில் ஒன்றாகக் கருதினார்கள். கி.பி. 1864-ம் ஆண்டில் அது வரை எழுபது வயதாகியும் தேவர்களுக்காகச் செய்ய வேண்டிய இந்த வேள்விக் கடமை நிறைவேறாமல் இருந்த தனது தகப்பனார் ஒரு யாகம் செய்வதற்கான ஏற்பாடுகளை உடனடியாகக் கவனித்தார்.

இரண்டு வருடங்கள் கழித்து பெரியவாளின் தகப்பனாரான மார்க்கஸஹாய (அப்பா) தீக்ஷிதர் நோய்வாய்ப் பட்டார்கள். தான் இந்த நோயிலிருந்து மீளப்போவதில்லை என்றும் உணர்ந்தார்கள். அவ்வமயம் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளைத் தன்னிடம் அழைத்து தனது தம்பியின் மூன்றாவது குமாரனான நீலகண்டனை ஸ்வீகாரப் புத்திரனாக எடுத்துக் கொள் என்று புத்திமதி சொன்னார்கள். ஏனென்றால் "எனக்குப் பித்ரு கார்யங்கள் செய்யப்போகும் நீ புத்திரவானாக இருந்து கொண்டுதான் செய்ய வேண்டும். உனது ஜாதகப்படியோ உனக்குச் சொந்தமாக பிள்ளையுண்டாகும் பாக்கியம் இருப்பதாகத் தெரியவில்லை". பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் தகப்பனாரின் விருப்பத்தைச் சிரமேற்கொண்டு உடனேயே நிறைவேற்றினார்கள். 1866ல் புத்திர ஸ்வீகாரம் நடந்தது. அடுத்த சில மாதங்களுக்குள் 1867 (பிப்-மார்ச்) மாசி மாதத்தில் தகப்பனாரின் நிர்யாணம் ஏற்பட்டது.

1874 மே-ஜுனில் (பவ வருஷம் வைகாசி மாதம்) பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் ஸோம யாகம் செய்தார்கள். இதற்கான ஆயத்தங்கள் சில வருஷங்களுக்கு முன்பே செய்து கொள்ளத் தொடங்கினார்கள். முதலாவதாக யாகங்களில் பிரதானமாக உபயோகிக்கப்படும் வேதமாகிய யஜுர் வேதத்தைப் பூர்த்தியாக அத்யயனம் செய்த தன்னை அதில் ஒர பாரங்கதனாகச் செய்து கொண்டார்கள். அதன்பின் யாகங்கள் செய்ய வேண்டிய முறைகளை விளக்கும் நூல்களை - (ச்ரௌதப் பிரயோகங்களை) - பிடித்துப் பரிச்சயம் செய்து கொண்டார்கள். யாகத்தை நடத்திக் கொடுக்க வேண்டியதற்கு யார் யாரை எந்தெந்த ஸ்தானத்தில் ரித்விக்குகளாக வரிக்க வேண்டும் என்பதையும் முன்கூட்டியே தீர்மானித்து, அவர்களுடன் முன்னதாகவே பல தடவைகள் விளக்கமாகப் பேசியதோடு அவரவர்கள் நிறைவேற்ற வேண்டிய கார்யங்களுக்கு ஒத்திகைகளே நடத்திப்பார்த்து திருப்தியடைந்தார்கள். இவ்வளவு ஸம்பூர்ணமாகத் தன்னைத் தயார் செய்து கொண்ட பிறகே தான் அவர்கள் ஸோம யாகத்தை யதார்த்தமாக ஆரம்பித்தார்கள்.

யாகத்தில் கலந்துகொண்ட பெரியோர்களில் முக்கிய ஸ்தானம் வகித்து தலைமை தாங்கி நடத்திக் கொடுத்தவர் திருவையாறு பிரம்மஸ்ரீ குப்புஸ்வாமி ச்ரௌதிகள் ஆவர். யாகத்தில் கலந்து கொண்ட ஒவ்வொருவரும், யாகங்கள் கலந்து கொண்ட ஒவ்வொருவரும், யாகங்கள் சம்பந்தமான நூல்கள் பிரயோகங்கள் முதலியவற்றில் தெளிந்த அறிவுள்ளவர்களாகவும், யாகங்களில் தாங்கள் ஏற்றுக் கொண்ட பாகங்களைச் சரியானபடி நடத்திக் கொடுக்கத் தேவையான முன் அனுபவமும் விசேஷமாக உள்ளவர்களாகவும் அமைந்திருந்தார்கள். பாமணி ஆறு, கோபிநாதன் குளம் இவைகளுக்குச் சமீபமாகவும், ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேச்வரர் ஆலயத்திற்கு முன்னுமாகவும் நல்ல விஸ்தாரமான ஒரு கொட்டகை நிறுவப்பட்டது. இந்த யக்ஞ மகோத்ஸவத்தை மன்னார்குடியிலும், சுற்று வட்டாரத்திலுமுள்ள அனைத்துப் பண்டிதர்களும், தனவான்களும் கூடி வந்து

தரிசித்தார்கள். தவிர இக்கண் கொள்ளாக் காக்ஷியைக் கொஞ்சமேனும் பார்க்க வேண்டுமென்று பொதுஜனக்கூட்டமும் அலையலையாய் ஒவ்வொரு நாளும் வந்து குவிந்த வண்ணமிருந்தது.

இந்த யக்ஞத்தினால் வஸிஷ்ட வாமதேவாதி மஹரிஷிகள் வாழ்ந்த பழைய பொற்காலம் திரும்பிவிட்டதோ என்று ஜனங்களுக்குப் பிரமை தட்டியது. தவிர எல்லாவற்றிற்கும் மேல் உன்னத நிலையிலுள்ளவை நமது வேதங்கள்தான் என்ற தத்துவமும் இன்னுமொருமுறை ஊர்ஜிதம் செய்யப்பட்டது போல் தோன்றியது. பரிசுத்தம், ஆசாரம், தர்மசிந்தை, தெய்வத்தன்மை ஆகியவை எங்கும் நிரம்பி வழிந்தன. ஜனங்களோ பயபக்தி, தெய்வநம்பிக்கை இவைகளால் உந்தப் பட்டுத் திளைத்தார்கள். யாகச்சடங்குகளால் திருப்தி செய்யப் பட்டு மந்திரங்களால் ஆஹ்வானம் (அழைப்பு) செய்யப்பட்ட தேவர்கள் தங்கள் மறைவான இருப்பிடங்களிலிருந்து கொண்டே சாச்வதமில்லாத இவ்வுலகின் கண்ணுள்ள மானிடர்களுக்கும் பரமகருணையுடன் அருள் மழை பெய்வித்தாற் போலிருந்தது.

யாகம் செய்து முடித்த மறு வருடம் அதாவது யுவ வருஷத்தில் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளுக்கு ஒரு பேரன் பிறந்தான். தனது வம்சத் தொடர் நீடிக்க வேண்டுமென யக்ஞ தேவதை தனக்களித்த பரிசு இது என்று ஸந்தோஷித்து அக்குழந்தைக்கு யக்ஞேச்வரன் என்றே பெயரிட்டார்கள். பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் அறுபது வருடங்களுக்கு முன் அவதரித்த அதே யுவ வருஷத்தில் பேரன் பிறந்தது, பிராசீனமான சாஸ்த்ர ஞானத்தைப் பரப்புவது என்ற அவருக்கு மிகவும் இஷ்டமான கைங்கர்யத்தைத் தொடர்ந்து செய்வதற்காகவே வந்த ஞானவொளி யாவான் என்பது நிச்சயமாகத் தெரிந்தது.

## பத்தாவது அத்தியாயம்

## குடும்ப விவகாரம்

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் ஸோமயாகம் செய்து முடித்ததிலிருந்து யக்ஞம் செயதவர்களுக்கு விசேஷ கர்மாக்களாக விதிக்கப்பட்ட பசுபந்தம், இஷ்டி, அக்னிஹோத்ரம் முதலியவற்றை காலா காலத்தில் முறைப்படி செய்து வந்தார். எல்லோரின் மரியாதைக்குப் பாத்திரமாயிருந்த சுந்தரி என்ற சாஸ்த்ரிகளின் மனைவியார் அவருக்குகந்த தர்மபத்தினியாக அமைந்திருந்தார். வெள்ளை மனதுடனும், கொஞ்சமும் சுய நலமில்லாமலும் கூட இருந்து ஒர கிருஹஸ்தன் கடைப்பிடிக்க வேண்டிய தர்மத்திற்கு அனுசரணையாக இந்த கிருஹபத்தினி செய்த கைங்கர்யம், ஏற்கெனவே புனிதமாக இருந்த சூழ்நிலையை லேும் பவித்திரமாக்கியது.

கிருஹத்தில் நடக்கும் நித்ய கர்மாக்களாகட்டும், அல்லது விசேஷ கர்மாக்களாகட்டும், அவைகளுக்குத் தேவையான உமி, பசு விராட்டி, பசுஞ்சாணி உரண்டைகள், நெய் முதலியவற்றை சேகரிப்பது, அக்ஷதை பொறுக்கி வைப்பது முதலியவற்றையும் இவை சம்பந்தமான மற்ற ஏற்பாடுகளையும் வெகு சிரத்தையோடும், குறைவு ஏதும் ஏற்படாமல் நுட்பமாகவும் கவனிப்பார். வந்திருக்கும் விருந்தாளிகளைத் தங்கி போஜனம் செய்துவிட்டத்தான் போகவேண்டுமென அன்புடன் கேட்டுக் கொள்வார். அவர் போஜனத்திற்கு அழைக்கும் பண்பே அழகாக இருக்கும். வைதீக வாழ்க்கை நடத்துபவர்களானால் "தாங்கள் இன்று வைச்வதேவத்தை இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டும்" என்பார். மற்றவர்களிடம் "தாங்கள் இன்று எங்கள்கூட உட்கார்ந்து போஜனம் செய்ய வேணும்" என்பார். அவர் இனிய பண்பும், தயாள உள்ளமும் படைத்தவர். கருணையும் வாத்ஸல்யமும் கொண்டவர்கள். சுறுசுறுப்பும் சிக்கனமும்

மிக்கவர். எவ்விஷயத்தையும் நுட்பமாகவும், சிரத்தையுடனும் கவனிப்பவராகவும், ஆசாரசீலராகவும் கபடமிலாதவராகவும், ஆழ்ந்த தெய்வபக்தி உள்ளவராகவும் திகழ்ந்தார். எளிமையாகவும், யதார்த்தியாகவும் விளங்கிய இவர் ஒரு கிருஹஸ்தனின் தர்மபத்னிக்குரிய கடமைகளில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டார்.

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் தாயார் நீண்ட காலம் வாழ்ந்தார்கள். அனேக வருடம் அவர்கள் கூத்தம்பாடியயிலிருந்த குடும்ப வீட்டிலேயே தனது விதவையான ஒரு பெண்ணுடன் வசித்து வந்தார்கள். கூத்தம்பாடியில் சாஸ்த்ரிகளின் முன்னோர் ஒருவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அகஸ்த்யேச்வரர் கோவில் ஒன்று உள்ளது. தாயாரின் சொல்படி சாஸ்த்ரிகள் அந்தக் கோவிலுக்குக் கும்பாபிஷேகம் நடத்தி வைத்தார்கள்.

தனது பெண் இறந்த பிறகு அந்த மூதாட்டி தனது பிள்ளையுடன் மன்னார்குடியில் வந்து வசிக்கலானார்கள். எதிலும் தோஷம் கற்பிக்கும் ஸ்வபாவமுள்ள அந்த மூதாட்டிக்குத் தற்போது வயோதிக தசையினால் ஏற்படக்கூடிய வக்ர சுபாவங்களும் சேர்ந்து கொண்டன. இதற்கெல்லாம் ஈடு கொடுத்துக் கொண்டு அவர்களை மிக்க கவலையுடனும் அன்புடனும் கவனித்துக் கொண்டார்கள். இப்படியே அந்த மூதாட்டி தனது கொள்ளுப்பேரனுக்கு (யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள்) ஐந்தாவது வயது ஆகும் வரை வாழ்ந்தார்கள்.

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் இரண்ட பெண்களில் மூத்தவள் நல்ல தனவந்தரும், நன்கு படித்வருமான ஸீதாராம சாஸ்த்திரிகளக்கு வாழ்க்கைப்பட்டாள். ஆனால் இளம் வயதிலேயே அவள் விதவையாக நேர்ந்தது. இரண்டாவது மாப்பிள்ளையும். நல்ல கொழுத்த பணக்காரக் குடும்பத்திலிருந்து தான் அமைந்தது. ஆனால் தனது பால்யத்திலேயே ஊதாரிச் செலவு செய்த தானே சொத்தையெல்லாம் அழித்துவிட்டார்.

தனது ஸ்வீகாரக் குமாரனுக்கு ஆடுதுறையையடுத்த மருத்துவக்குடியிலிருந்த பிரம்மஸ்ரீ ஸாமி சாஸ்த்ரிகளின் பெண்ணை விவாஹம் செய்து வைத்தார்கள். ஸாமி சாஸ்த்ரிகள் தர்ம சாஸ்திரத்திலும் ஜ்யோதிஷக் கணிதத்திலும் அபாரமான தேர்ச்சியடைந்தவர்கள். தனது நற்குணங்களால் ஒர உதாரண புருஷராக விளங்கிய அவர், அவருக்குப் பரிச்சயமானவர்களால் மிக்க கௌரவமாக மதிக்கப்பட்டார். அன்னாரின் பெண்ணான மங்களாம்பாள் ஒரு நல்ல மாட்டுப் பெண்ணுக்கு இருக்க வேண்டிய குணாதிசயங்கள் பொருந்தியவளாக இருந்தாள். புக்ககத்திற்க வந்த சிறு வயதிலிருந்தே அவள் அந்தக் குடும்பக் கடமைகளின் முழு பாரத்தையும் சுமந்து வீட்டிலுள்ள பெரியோர்களின் நன்மதிப்பையும், அன்பையும் ஸம்பாதித்துக் கொண்டாள், அவளுடைய விலை மதிக்க முடியாத சேவைகளை அப்பெரியோர்கள் அடிக்கடி வெளிப்படையாகவே பாராட்டுவதற்குத் தயங்குவதில்லை.

## பதினொன்றாவது அத்தியாயம்

## சாஸ்த்ரிகளது படைப்புகள்

பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் அவர்கள் நமக்கு விட்டுச் சென்றிருக்கும் அவர்களது படைப்புகள், உன்னதமான வேதாந்த விஷயங்களைப் பற்றியோ அல்லது மதம், பக்தி இவைகள் சம்பந்தமாகவோ தானிருக்கின்றன. வேதாந்த பரமான படைப்புகளில் "ஸத்வித்யாவிலாஸ:" என்ற நூலைக் குறிப்பிட வேண்டும். இது சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆறாவது அத்யாயத்தைத் தெளிவாக விளக்கும் சுலோகங்கள் கொண்ட காவ்யம். இதற்குக் கூடவே உரைநடையில் ஒரு வியாக்கியானமும் செய்துள்ளார்கள்.

யைப்பரப்புவதான ஒரு ஆதாரமற்றதாகவும், மேலெழுந்த வாரியாக எழதப்பட்டு வெளியிடப்பட்டதுமான ஒர புத்தகத்தைப் பற்றி ஒரு திடமான சிவபக்தர் மிகுந்த கோபத்துடன் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளிடம் முறையிட்டார். சாஸ்த்ரிகள் ஒரு சிஷ்யனை அந்தப் புத்தகத்தைப் படிக்கச் சொன்னார்கள். உடனேயே அதற்குப் பொருத்தமான தனது பதிலை எழுதிக் கொள் என்ற உத்தரவோடு மடமடவென்று சொல்லத் தொடங்கினார்கள். இப்படி பதிலுக்கான விஷயத்தை சாஸ்த்ரிகள் சொல்லிக் கொண்டிருந்த பொழுது அரசாங்கத்தில் நீதித்துறையில் பணி செய்து வந்த சாஸ்த்ரிகளின் தம்பி பிள்ளை ஸ்ரீ A.ஸாம்பமூர்த்தி அய்யர் உடனிருந்தார்கள்.

கண்டனத்துக்குரிய இகழ்ச்சிகளுக்கு மறுப்புகளை வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள் இவைகளிலிருந்து ஏராளமான மேற்கோள்களைக் காட்டி, பஸ்மா, ருத்ராக்ஷம் இவைகளின் மகிமைகளைப் போற்றியிருக்கும் இந்தப் புத்தகம் எழுதப்படும்போது வேறு எந்தப் புத்தகத்தையும் குறிப்பிற்கோ அல்லது மேற்கோள்கள் எடுப்பதற்குக் கூடவோ பார்க்காமல் சாஸ்த்ரிகள் தங்கு தடையின்றி க்ஷண காலத்தில் சொல்லி முடித்தார்கள். வக்கிரபுத்தியுள்ள ஒருவன் எழுதியிருந்த தாறுமாறான ஒரு விஷயத்திற்கு மறுப்பாக அமைந்த இப்புத்தகத்தில் கோபதாபத்தையோ துவேஷமான எண்ணத்தையோ கொஞ்சமும் பார்க்க முடியாது. அதில் அற்பமான சச்சரவு மனப்பான்மைக்கே இடமில்லை. அதன் நடையிலும் முறையிலும் உண்மையான பண்பும் ஏற்றமும் காணப்படுகின்றன. இதற்குக் காரணபூதமாக இருந்தவரைப் பற்றிய அணுகு முறையோ கருணையோடும் பெருந்தன்மை யோடும் இருப்பதைப் பார்க்கலாம். இம்மாதிரியான தவறான அபிப்பிராயங்கள்-விநாசத்தைக் கொடுக்கக்கூடிய எண்ணங்கள்-அதிகம் சிந்திக்க இயலாத பாமரர்களின் மனதைக் கெடுக்கும் அளவுக்குப் பரவிவிடக்கூடாதே என்ற கவலை மாத்திரம் பெரியவாளிடம் இருந்தது என்பது நன்கு புரிகிறது.

கண்டனத்துக்குரியதானப் புத்தகத்தை எழுதியவரின் (ஸ்ரீ ராமசுப்பா சாஸ்த்ரிகள்) மூதாதையர் எல்லோரும் இவர் தூஷிக்கும் விஷயங்களைப் பயபக்தியோடு அனுசரித்தவர்கள். அப்பேர்ப்பட்ட முன்னோர்களின் பாதையிலிருந்து விலகி அதையே பரிஹஸிக்கும் இவரை சாஸ்த்ரிகள் நிந்தைக்குரியவன் என்று சொல்லி ஏற்கெனவே புனிதமான அத்தாட்சிகளோடு ஒப்புக் கொளள்ப்பட்ட விஷயங்களை சின்னப் புத்தியுடன் விமரிசிப்பதையோ, நிந்திப்பதையோ விட்டுவிட்டு தனக்குப் பிடித்த வழியில் தான் மாத்திரம் போகலாமே என்றும் புத்திமதி சொல்லுகிறார்கள்.

ஆனால் அந்தப்பண்டிதரோ சாஸ்த்ரிகளின் புத்தகத்திற்கு ஒரு பதில் சவால் விட்டெழுதினார். ஆனால் அதைத் தகர்த்துத் தரைமட்டமாக்க வேண்டிய பொறுப்பை ஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகளும் மற்ற சிஷ்யர்களும் தாங்களாகவே எடுத்துக் கொண்டார்கள். ஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகள், அந்த எதிரியின் குயுக்தி வாதங்களையும், இந்த விஷயத்தில் அவருக்கிருந்த குறைபாடுகளனைத்தையும் தயவு, தாக்ஷிண்யமின்றி அம்பலப்படுத்தினார். மேலும் அவரைப் பெரியவாளை நேருக்கு நேர் சந்தித்துப் பேசத் தான் எடுத்துக் கொண்ட முயற்சிகளையெல்லாம் நிறைவேற்ற முடியாமல் செய்ய அவர் கையாண்ட முறைகளையெல்லாம் அப்பட்டமாகக் கேலி செய்து எழுதினார்.

அடுத்து நாம் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் விட்டுச்சென்ற தோத்திரக் கவிதைகளைக் கவனிப்போம். அவர்களின் தோத்திரங்கள் பலவற்றைத் தொகுத்து "தியாகராஜஸ்தவம்" என்ற புத்தகம் வெளியிடப்பட்டுள்ளது. இதுவே இந்த தோத்திர வரிசையில் முதல் புத்தகம். கவிதை என்று பார்க்கும் போதும் இது மிகவும் பாராட்டுக்குரிய கவனமாகும். இந்தக் கவிதைத் தொகுப்பில் சுலோகங்களைத் துல்லியமாக விளக்கும் வியாக்கி யானமும் சேர்க்கப்பட்டுள்ளது. இந்த வியாக்கியானம் கவிதைகளில் உபொகப்படுத்தப்பட்டிருக்கும் சந்தங்களின் (மீடர்)

அமைப்பைப் பற்றியும் இதில் வரும் அலங்கார விசேஷங்களை எடுத்துக் காட்டியும் விவரமாக விளக்குகிறது. ஸ்மிருதி புராணங்களிலிருந்து கொடுக்கப்பட்டிருக்கும் ஏராளமான மேற்கோள்கள் இந்த வியாக்யானத்திற்கு மேலும் சுவையூட்டுகிறது. இப்புத்தகம் நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் முன்னுரையில் சாஸ்த்ரிகள் தனத முன்னோர்களைப் பற்றியும் தனது குருமார்களைப் பற்றியும் விவரமாகச் சொல்லுகிறார்.

இந்த வரிசையில் மற்றுமொரு தோத்திரம் "தாம்பிரமாரணி ஸ்துதி" என்பத. பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் திருநெல்வேலிக்கு அந்தவூர் பிரபல வக்கீலான ஸ்ரீ A.கிருஷ்ணஸாமி அய்யரின் அழைப்பின்பேரில் சென்ற யாத்திரை சமயத்தில் எழதப்பட்டது. இதே தலைப்பில் திருநெல்வேலியைச் சுற்றியுள்ள அனேக சிவஸ்தலங்களைப் பற்றிப் பேசும் பாட்டுக்களும் இருக்கின்றன.

இந்தத் தொகுப்பில் "காவேரி நவரத்ன மாலிகா" என்ற தோத்திரமும் இருக்கிறது. இந்தத் தோத்திரம் சாஸ்த்ரிகள் திருச்சிக்கு அருகிலுள்ள மணத்தட்டை என்ற ஊரக்கு அவ்வூர் பெரிய மிராசுதாரர் ஒருவரின் அழைப்பின் பேரில் விஜயம் செய்தபோது எழுதப்பட்டதாகும். இந்தத் தொகுப்பில் திருவாரூர் தியாகராஜஸ்வாமி, மன்னார்குடி ராஜகோபால ஸ்வாமி கோவில்களில் ஆண்டுதோறும் நடைபெறும் உத்ஸவங்களின் வர்ணனைகள் அடங்கிய தோத்திரங்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

அவர்களது இதர கிரந்தங்களில் உரைநடையில் எழுதப்பட்ட "தீக்ஷித வம்சாபரணத்தையும்" செய்யுளில் அமைந்திருக்கும் "தீக்ஷித நவரத்னமாலிகாத" வையும் குறிப்பிடலாம்.

சாஸ்த்ரிகளால் செய்யப்பட்ட இங்குக் குறிப்பிடப்படாத சில்லரைக்கவிதைகள் பலவற்றுள் "சதுச்லோகீ வ்யாக்யா" என்ற கிரந்தம் மிகவும் முக்கியமானது. ஏனெனில் அதில் ஸ்ரீமதப்பய்ய

தீக்ஷிதர் அவர்களுடைய பிறப்பு. இறப்பு காலத்தைத் தெளிவுபடுத்தக் கூடிய குறிப்பு காணப்படுகிறது. இப்பொழுது கிடைக்கப்பெறாமல் இருக்கும் தீக்ஷிதர் அவர்களின் ஒரு சரித்திரத்திலிருந்து கொடுக்கப்பட்டிருக்கும் ஒரு மேற்கோள் ஆகிய அக்குறிப்பு பின்வருமாறு:-

विक्रमे भूतलं प्राप्य विजये स्वर्गमाययु: ।।

விக்ரமே பூ[4]தலம் ப்ராப்ய விஜயே ஸ்வர்க[3] மாயயு:

இந்த வசனத்தின் மூலம் நாம் ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதரின் காலத்தை கி.பி. 1520லிருந்து 1593 வரை என்று நிர்ணயிக்கலாம்.

### பன்னிரண்டாவது அத்தியாயம்

## பிரயாணங்களும், சுற்றுலாவும்

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் தம்பி ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் என்பவர் தன் பிள்ளை ஸ்ரீ மஹாலிங்க அய்யருடன் மதுரையில் வசித்து வந்தார். ஸ்ரீ மஹாலிங்க அய்யர் மதுரையில் தமிழ் வழக்கறிஞராகத் தொழில் புரிந்து வந்தார். தொழிலில் நல்ல முன்னேற்றம் அடைந்து வேண்டிய வசதிகளுடன் வசித்து வந்தார். அவர் தனது பெரியப்பாவை மதுரைக்கு வந்து தங்கள் குடும்பத்தாருடன் ஒரு மாதமாவது தங்கியிருக்க வேண்டுமென அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார். இது கி.பி. 1882 வாக்கில் நடந்தது. சாஸ்த்ரிகள் மதுரையில் தங்கிக் கொண்டிருந்த சமயர், திருநெல்வேலியில் பிரபலமான வக்கீலாக இருந்த கைலாசபுரம் A.கிருஷ்ணஸ்வாமி அய்யர் சாஸ்த்ரிகளைத் தரிசனம் செய்த தனது வந்தனங்களைத் தெரிவித்துப் போக வந்திருந்தார். அப்பொழுது அப்படியே திருநெல்வேலிக்கும் விஜயம் செய்ய வேண்டுமென சாஸ்த்ரிகளை வேண்டிக் கொண்டார். அதற்கு இசைந்து சாஸ்த்ரிகளும் திருநெல்வேலி சென்று ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யரின் விருந்தாளியாக ஒரு மாதத்திற்கு

மேல் தங்கியிருந்து திருநெல்வேலிக்குச் சமீபத்திலுள்ள பல க்ஷேத்திரங்களுக்குப் போய் தரிசனம் செய்து கொண்டு வந்தார்கள்.

சாஸ்த்ரிகள் மணத்தட்டைக்கு விஜயம் செய்திருந்த சமயம் கோவர்தன ரங்காச்சாரியார் என்ற மஹாவித்வான் சாஸ்த்ரிகளை ஸ்ரீமன் நாராயணனைப் பற்றி உடன்யஸிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அவர் விருப்பபடி அனேக சான்றோர்கள் முன்னிலையில் செய்யப்பட்ட உபன்யாஸத்தில் சாஸ்த்ரிகள், தனது அகண்டமான வித்வத்தை வெளிப்படுத்தி ஸ்ரீமன் நாராயணனின் மகிமையைப் பற்றியும், சிவ தத்துவத்தில் நாராயண தத்துவம் ஐக்கியமாவதையும் விளக்கினார்கள்.

அதன் பின் அவ்வூர் பிரமுகர்கள் கொஞ்சம் சிறு பிள்ளைத்தனமாம கொனஷ்டைப் பேச்சு, பதிர் போடுவது இவைகளில் கைதேர்ந்த ஒருவருடன் நேருக்கு நேர் வாதத்தில் சாஸ்த்ரிகளை ஈடுபடுத்திவிட்டார்கள். அந்த வித்வான் விட்ட ஒவ்வொரு வினாவுக்கும், புதிருக்கும் சரியான பதிலைக் கொடுத்துக் கொண்டே வந்த சாஸ்த்ரிகள் அந்த வித்வானுக்கு எல்லையற்ற ஆச்சர்யத்தையளிக்கும் வகையில் திடீரென்று ஒரு புதிரடங்கிய சுலோகத்தைக் கவனம் செய்து வித்வானிடம் எதிர் கேள்வி கேட்டு அவரை மடக்கினார்கள். வித்வான் அச்சுலோகத்தில் அடங்கிய புதிருக்கு விடை புரியாமல் விழித்தார். அச்சுலோகம் வருமாறு :-

समुद्र नवनीतेन धनञ्जय गवाहर ।

आशु नः सुतरामेण शयानन्तनुते हितम् ।।

ஸமுத்³ர நவநீதேன த⁴னஞ்ஜயக³வாஹர |

ஆஶு ந: ஸுதராமேண ஶயானந்தனுதேஹிதம் ||

இச்சுலோகத்தில் வார்த்தைகளை ஒன்றுக்கொன்று சேர்க்கும் கடினமான ஸமாஸயுக்தியானது வார்த்தைகளின்

உருவம் புரியாதபடி அமைந்திருக்கிறது. மேலும் உபயோகித்திருக்கும் வார்த்தைகளும் கொஞ்சம் அபூர்வமாக (அதிகம் பழக்கத்தில் இல்லாத) சொற்களாக இருப்பது இச்சுலோகத்தைப் பரிந்து கொள்வதை மேலும் சிக்கலாக்குகிறது. இதற்குக் கீழ்க்கண்டவாறு மொழிபெயர்ப்பு செய்யலாம்.

"சந்திரன், சூர்யன், அக்னி இவாக்ளை முக்கண்களாக உடையவரே! கையில் மானைத் தரித்திருப்பவரே! ஸ்ரீ மகாவிஷ்ணுவால் பூஜிக்கப்படுபவரே! ஓ ஈச்வரா! எங்களது இஷ்டங்களை உடனடியாகவும், முழுமையாகவும் பூர்த்தி செய்வீராக!"

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளிடம் அப்யித்த ஸந்யாஸி ஒருவரிடம் மாணாக்கனாகப் பயின்ற மஹாமஹோபாத்யாய பேராசிரியர் S.குப்புஸ்வாமி சாஸ்த்ரிகள் தனது குருவின் (பழமாநேரி ஸ்வாமிகள்) மூலமாக பெரியவாளின் வாழ்க்கையில் ஏற்பட்ட சுவையான நிகழ்ச்சிகள் பெரியவாள் அவ்வப்பொழுது சொல்லி வந்த பொன் மொழிகள் முதலியவற்றைத் தெரிந்து வைத்திருந்தார்கள். பெரியவாள் கோனேரிராஜபுரத்திற்கு விஜயம் செய்த போது நடந்த சம்பவம் அவைகளில் ஒன்றாகும். அஸாத்தியமாகக் கொசுக்கள் மண்டியிருந்த கோனேரி ராஜபுரம். அங்குத் தூக்கமில்லாமல் தான் கழித்த ஒரு இரவை ஞாபகப்படுத்தும் வகையில் சாஸ்த்ரிகள் அவர்களை ஒரு கவிதையை எழதி வைக்கத் தூண்டியது. அவ்வூரில் இன்னும் சில தினங்கள் பெரியவாள் தங்க வேண்டமென பிடிவாதமாகக் கேட்டுக் கொண்ட அவ்வூரிலுள்ள மற்ற தனிகர்களான கிருஹஸ்தர்களுக்கும் சொல்லப்பட்ட பதிலாக இச்சுலோகம் அமைந்திருக்கிறது.

இந்த சுலோகத்தில் சில வார்த்தைத் தொடர்களை மட்டும்தான் ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்த்ரிகளால் நினைவுகூர முடிந்தது. இச்சரிதத்தை ஆங்கிலத்தில் எழுதிய ஸ்ரீ மஹாலிங்க சாஸ்த்ரிகள் இதன் பிரதி எங்காவது கிடைக்குமா என்று செய்த

முயற்சிகள் பயன் கொடுக்கவில்லை. ஆகவே பேராசிரியர் கொடுத்த வார்த்தைத் தொடர்களைக் கீழ்க்கண்டபடி இவ்வாசிரியர் பூர்த்தி செய்துள்ளார்கள். கீழே கோடிட்ட வார்த்தைகள் மாத்திரம் பெரியவாளின் கவனமாகும். மற்றவை ஆசிரியர் பூர்த்தி செய்தவை.

मशकिमधुरगीते रात्रिसंवेशिनंमी
सपदिपरिचरन्ती दूरमुत्सार्य निद्राम् ।
विहरसि निखिलाङ्गे रक्तरक्तानितान्तं
क्षिपसि च समयं में वल्लभेवाप्रभातम् ।

மஶகிமது4ரகீ3தே ராத்ரிஸம்வேஶிநம்மீ
ஸபதி3 பரிசரந்தீ தூ3ரமுத்ஸார்ய நித்3ராம் |
விஹரஸி நிகி2லாங்கே3 ரக்தரக்தா நிதாந்தம்
க்ஷிபஸி ச ஸமயம் மே வல்லபே4வாப்ரபா4தம் ||

இங்கு கொசுவானது வ்யாஜோக்தியாக ஒரு காதலியாக வைத்துப் பேசப்படுகிறது.

"அவள் இனிமையாகப் பாடுகிறாள். படுக்கையில் இரவு பூராவும் கூடவே தூங்காமல் இருந்து ஆசையுடன் கைகால்களைப் பிடித்துவிட்டு நம்மைக் கவனித்துக் கொள்கிறாள். அவள் காமம் மிகுந்தவளாக முகம் சிவந்தவளாக (நமது ரத்தத்தைக் குடிப்பதற்கு வெறி பிடித்தவளாக) இருக்கிறாள்".

நெப்பத்தூரில் இருந்த ஸ்ரீரங்கநாத அய்யர் என்ற தனிகரான ஒரு பிராசுதாரர் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளிடம் மிகுந்த கௌரவ புத்தியுள்ளவராக இருந்தார். அவர் அடிக்கடி மன்னார்குடிக்கு வந்து பெரியவாளைத் தரிசித்து வந்தனம் செய்து கொள்வது வழக்கம். பெரியவாளைப் பார்க்கும் சந்தர்ப்பங்களில் தனது கிராமத்திற்குப் பெரியவாள் விஜயம்

செய்து சில தினங்களாவது தங்க வேண்டுமென வேண்டிக் கொள்வார்கள். அதற்கிணங்க பெரியவாள் நெப்பத்தூருக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீரங்கநாதய்யர் பெரியவாளிடம் வைத்திருந்த மிகுந்த பக்தி காரணமாக அவர்களுக்கு வேண்டிய கைங்கர்யங்களனைத்தையும் தானே நேரில் செய்து வந்தார். ஆனால் வந்தனம் செய்தவற்கு வழக்கப்படி வருகிற சமயம் தவிர மற்ற வேளைகளில் பெரியவாளின் கண்ணில் படாமல் மறைவிலிருந்தே கார்யங்களைக் கவனித்து வந்தார்.

கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள காரத்தூர் என்ற ஊருக்கு பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் விஜயம் செய்த பொழுது ஒரு வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது. அவ்வூரிலிருந்த ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதர் வம்சத்தில் வந்தவரும், தனது வித்யையினால் பிரபலமாகவிருந்தவருமான ஒரு தனிகர் செய்து கொண்டிருந்த யாகத்தில் கலந்து கொள்ளும்படி வந்திருந்த அழைப்பின் பேரில் சாஸ்த்ரிகள் அங்குச் சென்றார்கள். எல்லா பிரயாணங்களிலும் வழக்கமாக இருப்பது போல் இப்பொழுதும், பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளுடன், அனேக பிரதான சிஷ்யர்களும் சாஸ்த்ரிகளின் குடும்பத்தார் பலரும் உடன் சென்றார்கள். பெரும் கூட்டமாகவிருந்த இவர்கள் வரிசை வரிசையாக வண்டிகளில் வந்து சேர்ந்தார்கள். பெரியவாளை முகமன் கூறி வரவேற்கவென்று அவ்வூர் பிரமுகர்களின் பெருங்கூட்டம் காத்திருந்தது.

பெரியவாளின் சிஷ்யர்களில் வயது முதிர்ந்தவரும், தீக்ஷிதேந்திரர் வம்சத்தில் வந்தவருமான பிரம்மஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் என்பவர்தான் ஒரு வண்டியிலிருந்து முதன் முதலாக இறங்கினார். இவர் நல்ல உயரமானவர், கம்பீரமும் திடகாத்திரமும் உள்ள சரீர ஸம்பத்துள்ளவர். எப்படிப்பட்ட கூட்டத்திலும் ஒரு முக்கியஸ்தராகக் கணிக்கப்படும் தோற்றமுள்ளவர். பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிககளின் வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஜனங்கள் முதன்முதலாக இறங்கியவரை சாஸ்த்ரிகள் தான் என்று

தவறுதலாக எண்ணிக்கொண்டு ஒருவர் பின் ஒருவராக காலில் விழுந்து அந்த இடத்திலேயே வணங்கினார்கள். கூட்டத்தில் இருந்தோர் அனைவரும் முண்டியடித்துக் கொண்டு நெருங்கி வந்து சில நிமிடங்களுக்குள் ஒவ்வொருவராகத் தங்கள் வந்தனங்களை முடித்துக் கொண்டு நின்றார்கள். நீலகண்ட தீக்ஷிதர் எவ்வளவு தடுத்துச் சொல்லி விளக்கியும் ஒருவரும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. சாஸ்த்ரிகளின் கோஷ்டியில் அடுத்தடுத்து வண்டிகளில் வந்திறங்கியவர்கள் இந்த வேடிக்கையை ரஸித்துக் கொண்டிருந்தார்கள். கடைசியாக சாஸ்த்ரிகள் வந்திறங்கியவுடன் அவ்வூர் பிரமுகர்கள் அவர்களை அடையாளம் கண்டுகொண்டு வரவேற்கத் தொடங்கியதும் தான் இந்த வேடிக்கை நின்றது.

1891-92க்குச் சரியான கர வருஷத்தில் சிதம்பரம் கோவிலில் கும்பாபிஷேகம் ஏற்பாடாகி இருந்தது. அது சமயம் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் இந்த க்ஷேத்திரத்திற்கு இரண்டாவது தடவையாக விஜயம் செய்தார்கள். சிதம்பரத்தில் மஹாமஹோபாத்யாய தண்டபாணி தீக்ஷிதர் என்ற பண்டிதர் இருந்தார். இவர் மஹாமஹோபாத்யாய ஹரிஹர சாஸ்த்ரிகளின் மாணாக்கராவார். ஸ்ரீ தண்டபாணி தீக்ஷிதர் தனது குருவின் குருவான பெரியவாளின் சிதம்பர விஜயத்தை மிகுந்த பெருமையுடன் நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து சுவாரஸ்யமாகப் பேசுவது வழக்கம். கீழ்க்கண்ட விவரம் அவர் சொல்லித் தெரிந்தது தான்.

கிறிஸ்துவர்களின் மதப்பிரசாரம் தீவிரமாக நடந்து கொண்டிருந்த காலம் அது. ஆகவே பெரியவாளின் சிதம்பர விஜயத்தின்போது நடுக்காவேரி ஸ்ரீ ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரிகளும், பைங்காநாடு ஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகளுமாக, ஸ்ரீ பாஸ்கர சேதுபதி, இலங்கை ஸ்ரீ ராமநாதன் இவர்களின் ஒத்துழைப்புடன், ஹிந்து மதத்திற்கு எதிராகச் செய்யப்படும் கிறிஸ்துவப் பாதிரிகளின் துஷ்பிரசாரத்திற்கு பதிலடி கொடுக்கவும், அவர்கள் செய்து வந்த மதமாற்றங்களைத் தடுத்து நிறுத்தவும் என்னென்ன

ஒருமைப்பாட்டு நடவடிக்கைகளை நாம் எடுக்க வேண்டுமென்பதை விவாதித்துத் தீர்மானிக்க ஒரு பேரவை கூட்டினார்கள்.

இந்தப் பேரவைக்குத் தலைமை தாங்கி நடத்திக் கொடுக்கும்படி பெரியவாள் கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். பெரியவாள், இந்த விஷயத்தில் இளைஞர்கள் தான் ஈடுபட்டுத் தக்க நடவடிக்கைகளைச் செயல்படுத்த முடியும் என்று முழுமையாக நம்பினார்கள். இருந்தாலும் ஒரு "ஸம்ப்ரதாயத்திற்காகத் தலைமை தாங்க இசைந்தார்கள். இந்த ஸம்ப்ரதாயம் என்பதற்கு முன் உதாரணமாக சாஸ்த்ரிகள் குறிப்பிட்டவதாவது: ஒரு நல்ல தேர்ச்சி பெற்றவளும் பிரஸித்தமடைந்தவளும் ஆனால் இளைய வயதுள்ள விதூம்ஷியின் பரதநாட்டியக் கச்சேரி ஒரு கோவிலில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால் அந்த இளைய விதூம்ஷி மேடையேறுமுன் கோவிலில் ஊதியம் பெற்று அன்றாடம் இறைவனுக்கு நாட்டிய சேவை செய்யும் உரிமை பெற்ற வயது முதிர்ந்த தாஸிதான் முதலில் மேடையேறி நாட்டிய நிகழ்சசியை ஆரம்பிக்க வேண்டுமென்பது ஸம்பிரதாயம். அவளுக்குப் பின்னரே தேர்ச்சிபெற்ற இளம் நாட்டிய கலைஞர் தனதுவிசேஷ நிகழ்ச்சியை ஆரம்பிக்கக் கூடும். அதேபோல், தான் முதலில் பேசுவதாகச் சொல்லிக் கொண்டு ஆரம்பித்த சாஸ்த்ரிகள் முதல் சில நமிடங்களுக்கு சிதம்பர க்ஷேத்திர மஹிமையைப் பற்றியும், ஸ்ரீ நடராஜ தத்துவத்தைப் பற்றியும் பேசிவிட்டு, அந்தப் பேரவைக் கூட்டத்தை ஆரம்பித்து வைத்தார்கள். அக்கூட்டத்தில் இளைஞர்கள் பலர் ஆவேசமாக உரையாடி ஹிந்துக்களை, கிறிஸ்துவர்கள் நம்மத சம்பந்தமாகச் செய்யும் துஷ்பிரசாரங் களைப்பற்றி எச்சரிக்கை செய்தார்கள்.

சில வருடங்களுக்குப்பின் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் வடக்கே திருப்பதி வரையுள்ள க்ஷேத்திரங்களுக்குச் சென்று தரிசிக்க வேண்டுமென விரும்பினார்கள். வெகுதூரதில் இருக்கும் காசிக்கு யாத்திரை செய்ய முடியும் என்ற நம்பிக்கையை முற்றிலும்

இழந்திருந்தார்கள். தனது வயது முதிர்ந்த நிலையிலும் கொஞ்சம்கூடக் குறைவில்லாமல் தான் அனுஷ்டித்து வரும் தினசர்யைகளுக்குப் பங்கமில்லாமல் வெகுதூரப் பிரயாணங்களில் இருக்க முடியாதென்ற காரணத்தாலும் காசி யாத்திரையிலிருந்த ஆசையைத் துறந்து விட்டார்கள் எனச் சொல்லலாம். இந்தக் காரணங்களால் காசி மஹாராஜாவிட மிருந்து பிரயாணச் செலவுகளுக்காக ஆயிரம் ரூபாய் முன் பணத்துடன் காசிக்கு வரும்படி வந்திருந்த அன்பழைப்பை ஏற்றுக் கொள்ள முடியாது போயிற்று.

அதிக தூரமில்லாத இந்தத் திருப்பதி யாத்திரைக்குப் பெரியவாளின் ஸஹோதரன் பிள்ளையான ஸ்ரீ A.மஹாலிங்க அய்யர் தகுந்த ஏற்பாடுகளைச் செய்தார். ரயிலில் ஒரு "கோச்" இவர்களுக்காகப் பிரத்யோகமாக ஒதுக்கிக் கொடுக்கப்பட்டது. பெரியவாளுடன் அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெரிய கோஷ்டி கிளம்பியது. அதில் அநேக சிநேகிதர்களும் சேர்ந்து கொண்டார்கள். யாதிரையில் விஜயம் செய்த க்ஷேத்திரங்கள், திருப்பதி, காளஹஸ்தி, காஞ்சீபுரம், விரிஞ்சீபுரம், விருத்தாசலம், திருவண்ணாமலை, சிதம்பரம், கஞ்சனூர், திருவிடைமருதூர், கும்பகோணம் ஆகியவையாம்.

அடையப்பல வம்சத்தாருக்குக் குலதெய்வமான விரிஞ்சீ புரத்திலுறையும் ஸ்ரீ மார்க்ஸஹாய ஸ்வாமிக்கு கார்த்திகை மாத ஞாயிற்றுக்கிழமைகள் விசேஷமான புனித தினங்களாகும். அந்தப் புனித தினமொன்றில் சாஸ்த்ரிகள் விரிஞ்சீபுரத்தில் தனது குலதெய்வத்தைத் தரிசித்துக் கொண்டார்கள். அடுத்து மார்கழி மாதத்தில் திருவாதிரையில் ஸ்ரீ நடராஜாவின் தரிசனத்திற்குச் சிதம்பரம் வந்து சேர்ந்தார்கள். சிதம்பரத்திற்கு மூன்றாவது தடவையான இந்த விஜயத்தில் சாஸ்த்ரிகள் ஒரு வாரம் தங்கினார்கள். சாஸ்த்ரிகள் சென்றவிடமெல்லாம் வித்வத்ஸதஸ் வைப்பது வழக்கம்.

சிதம்பரத்திலும் ஒரு ஸதஸ்ஸுக்கு ஏற்பாடாகி அனேக பண்டிதர்கள் அதில் பங்கு கொள்ளக்குழுமினார்கள். பாமரஜனங்களும், உபந்யாஸங்களைக் கேட்கவும், பெரியவாளைத் தரிசனம் செய்யவேண்டுமென்ற ஆசையிலும் பெருங்கூட்டமாகக் கூடினார்கள். சாஸ்த்ரிகளுக்கு ஏறக்குறைய சமவயதுள்ள, நல்ல கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்ற ஒரு வைஷ்ணவ வித்வான் சாஸ்த்ரிகளின் அறிவு செறிந்த உபந்தயாஸங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டு இந்தப் பிரயாணக் கோஷ்டியை காஞ்சீபுரத்திலிருந்து சிதம்பரம் வரை தொடர்ந்து வந்து கொண்டே இருந்தார். சாஸ்த்ரிகள் தங்கின ஒவ்வொரு ஊரிலும் செய்யப்பட்ட உபநயாஸங்களைக் கூட்டத்தில் ஒருவராக அமர்ந்து கொண்டு, மிகவும் ஊக்கத்துடன் சிரவணம் செய்து வந்தார். சிதம்பரத்தில் நடந்த உபந்யாஸம் ஒன்றில் சாஸ்த்ரிகள் ஸ்ரீ வேதாந்த தேசிகரின் வாக்யம் ஒன்றை விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்த சமயம், இந்த முதிர்ந்த வைஷ்ணவர் ஆனந்தப் பரவசத்தால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் ஹரஹாகாரம் செய்து பெரியவாளின் கவனத்தை ஈர்த்துவிட்டார். பிறகு இதுவரை மறைவிலேயே இருந்தவர் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு பெரியவாளிடம் அறிமுகம் செய்து கொண்டார்.

பகவான் ஸ்ரீ ரமண மஹிரிஷிகளைத் தரிசனம் செய்தவற்காக ஸ்ரீ ய. மஹாலிங்க சாஸ்த்ரிகள் )ஆங்கிலத்தில் இந்த வரலாறு எழுதியவர்) சென்ற சமயம் பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளின் கொள்ளுப்பேரன் அவர் என்று தெரிந்து கொண்டு பகவான் பழைய விஷயங்களை நினைவு கூறுபவராக அவரிடம் இப்படிச் சொன்னார்கள்.

"நான் மலையில் வசித்து வந்த காலத்தில் ஒரு பண்டாரம் கீழே இருந்து எனக்கு தினந்தோறும் ஆகாரம் கொண்டு வந்து கொடுப்பது வழக்கம். ஒரு நாள் வழக்கமாக வரும் நேரத்திற்குப் பல மணி நேரம் தாமதித்து வந்தார். நான் இதைப் பற்றி வினவிய பொழுது ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் திருவண்ணாமலைக்கு

யாத்திரையாக வந்துள்ளார்கள். அவர்களைத் தரிசனம் செய்ய இந்நகரத்து ஜனங்கள் திரள் திரளாக வேகமாய்ச் செல்லுகிறார்கள். நானும் அங்கு தான் போய் வந்தேன் என்று பதிலளித்தார்". இந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து பேசிய மஹரிஷிகள் உடனே ஆழ்ந்த மௌனத்தை அவலம்பித்து விட்டார்கள்.

கி.பி. 1895ல் (தமிழ் மன்மத வருஷத்தில்) கும்பகோணத்தில் அத்வைத ஸபா என்ற ஸ்தாபனம் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் முன்னிலையில் துவக்கப்பட்டது. அந்த சந்தர்ப்பத்தில் சாஸ்த்ரிகள் "காயத்ரீ மஹிமை" என்ற பொருள் பற்றி சுமார் மூன்று மணி நேரம் ஸம்ஸ்க்ருதத்திலேயே பேசினார்கள். இந்த உபன்யாசத்தைப் பொதுஜனங்களுக்காக இரண்டு பிரதான பண்டிதர்கள் தமிழில் மொழிபெயர்த்துச் சொன்னார்கள். அன்றைய பேருரையைச் சிரவணம் செய்யக் கொடுத்து வைத்திருந்த பாக்கியசாலிகள், மறக்க முடியாத அந்த அனுபவத்தை, பிற்காலத்தில் நினைக்கும்போதெல்லாம் ஆனந்த வெள்ளத்தில் மெய்ம்மறந்து போவார்கள்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்

## பலதரப்பட்ட இதர விஷயங்கள்

ஆங்கிலப் படிப்புப் பெற்றிருந்த கனவான் ஒருவர் ஒரு சமயம் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளிடம் தர்ம சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் வைதீக கர்மாக்களைச் செய்வதால் என்ன பிரயோஜனம்? மந்திரங்கள் ஜபிப்பதால் என்ன சக்தியிருக்கிறது? என்ற வினவினார். இந்தக் கர்மாக்கள், மந்திர ஜபங்கள் இவைகளால் ஏற்படுவதாக சாதாரணமாகச் சொல்லப்படும் உபயோகமோ, பிராபல்யமோ, பிரமாணங்களோடு நிரூபிக்கப்

படாதவை. ஆகையால் ஒப்புக்கொள்ள முடியாதவை என்பது அந்த கனவானின் வாதம். பெரியவாள் இந்த வினாவைப் பல கோணங்களில் தாக்கிப் பதிலளித்தார்கள். ஆனால் முதன் முதலாக அந்தக்கனவானின் அவமரியாதையுடன் கூடிய பொறுப்பில்லாத நோக்கத்தைக் கடுமையாகக் கண்டிக்கத் தவறவில்லை. ஒரு விஷயத்தைத் தாக்கிப் பேசுவதற்குத் திட்டம் செய்வதற்கு முன் அதைப் பற்றின முழு விவரத்தையும் நேரிடையாகக் கசடற நன்கறிந்து கொண்டு பாரபக்ஷமற்ற வகையில் கபடமில்லாமல் அதைச் சோதித்துப் பார்க்கவும் நன் முயற்சியாவது செய்யாமல் அதைப் பற்றின தப்பபிப்ராயங்களைச் சொல்லத் துணிவது மிகவும் பொறுப்பற்ற செய்கை. "உமது முன்னோர்கள் பாரம்பர்யமாக அனுஷ்டித்து வந்த பழக்க வழக்கங்களை உதறித்தள்ளிவிட்டுத் தான்தோன்றித் தனமாக வேறு ஆசாரங்களுக்குத் தன்னையறியாமல் நீர் இழுக்கப படுவதற்குக் காரணம் முழுமையற்ற ஏனைய மதங்களினால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாதிப்புத்தான். அதனால் தான், உமது முன்னோர்கள் உறுதியுடன் பிடித்துக் கொண்டிருந்த மோக்ஷ ஸாதனமான கொள்கைகளையெல்லாம் தவிடுபொடியாக்கும் தப்புப் பாதைகளில் கால் வைக்கக்கூடாதென்ற நுண்ணறிவுகூட உமக்கு ஏற்படவில்லை" என்று கூறி, பிறகு தன் வாழ்நாளில் தனக்கே ஏற்பட்ட ஓர் அனுபவத்தைக் குறிப்பிட்டு மந்திரங்களின் சக்தியை/பிரபாவத்தை ஆதரித்துப் பேசினார்கள். "ஒரு சமயம் நான் அதிகாலையில் ப்ராத ஸ்நானத்திற்காகச் சென்ற பொழுது கோபிநாதன் குளத்தருகே எனது கால் கட்டைவிரலில் ஒரு செந்தேள் கொட்டிவிட்டது. கடுமையான கொட்டுவலி தாங்காமல் தவித்து நான் ஹர, ஹர, சிவ, சிவ என்று கத்திவிட்டேன். வேதனையினால் நிற்க முடியாமல் கீழே விழுந்து என்னை, கூடஇருந்த எனது மாணாக்கர்கள் சிலர் தாங்கிக் கொண்டார்கள். அந்த சமயம் ஆந்திராவிலிருந்து வந்திருந்த ஒரு துறவி கோபிநாதன் குளக்கரையிலிருந்த மடத்தில் தங்கிக் கொண்டிருந்தார். எனது கூச்சலைக் கேட்ட அவர் கிட்டே வந்து என்ன விவரம் என்று விசாரித்தார். நடந்த விவரங்கள்

அவருக்குச் சொல்லப்பட்டவுடன் "பயம்லேது" அதாவது "பயப்பட வேண்டாம், பயப்பட வேண்டாம்" என்று தைரியம் சொல்லிக் கொண்டே குளத்தில் இறங்கி ஒரு கை தண்ணீர் எடுத்து வந்து ஏதோ மந்திரத்தை ஜபித்துக் கொண்டே அத்தண்ணீரை என் கால் கட்டைவிரலின் மேல் தெளித்தார். அடுத்த நிமிடமே எந்தக் கால் கட்டைவிரலில் தேள் கொட்டியது என்று கூடச் சொல்ல முடியாத அளவிற்கு என் வலிமெல்லாம் மறைந்துவிட்டது. நான் சற்றுமுன் அனுபவித்த வேதனையெல்லாம் கனவில் வந்து போனது போல் ஆயிற்று". பிறகு பெரியவாள் கர்மானுஷ்டானங்கள் செய்வதன் குறிக்கோள், அதன் முக்கியத்துவம், கௌரவம் இவைகளைப் பற்றி விரிவாக எடுத்துரைத்தார்கள். மத விச்வாசமில்லாதிருந்த அந்தக் குதர்க்கவாதி தன் மனதிற்குள்ளே ஒரு புரட்சிகரமான மாறுதல் நிகழ்வதை உணர்ந்தார். உடனே பெரியவாளின் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து அவர் முன்னிலையில் "நான் திருத்தி நல்ல ஸனாதன முறையில் வாழ்வேன்" என்று மிகப்பச்சாத்தாப உணர்வுடன் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்.

இந்த இடத்தில் நாம் ஒன்றை கவனிக்க வேண்டியது முக்கியமாகிறது. அதாவது, பெரியவாள் எந்தவிதமான, எவ்வளவு தீவிரமான அதிர்ச்சியோ, வேதனையோ ஏற்பட்ட சமயத்திலும் "ஐயோ" என்றோ "ஐய்யய்யோ" என்றோ கத்தினதில்லை. அதி உத்ஸாகமோ அல்லது அதி வேதனையோ ஏற்படும் பொழுது அவர்கள் உதட்டிலிருந்து பவித்திரமான சிவநாமங்கள் தான் வெளிப்படும்.

பெரியவாள் யாகம் செய்த முடித்ததைத் தொடர்ந்து அவர்களுக்கு ஒவ்வொரு பக்ஷத்திலும் தவறாது செய்ய வேண்டிய சில சடங்குகள் ஏற்பட்டன. இந்தச் சடங்குகளை நடத்தி வைக்க திருவையாறு குப்புஸ்வாமி சிரௌதிகள் தான் ஆசார்யானாக இருப்பது வழக்கம். காலை வேளைகளில் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் வேதம் ஓதுவதிலோ, பாராயணம் செய்வதிலோ, அல்லது பாடம் சொல்லுவதிலோ தன் முழு மனதுடன் ஈடுபட்ட இருப்பார்கள். அச்சமயங்களில் பார்க்க வருவோர் எவரும், அவர்கள் பேச

வேண்டிய விஷயம் எவ்வளவு முக்கியமானதாகவிருந்த போதிலும், அவர்கள் முன் நேராகத் தோன்றவோ, பேச்சுக் கொடுக்கவோ துணிய மாட்டார்கள். சடங்குகள் செய்து வைக்க வேண்டிய தினங்களில், ஆசாரியன் சரியான நேரத்திற்கு வந்து சேருவாரோ என்று பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் கவலைப்பட்டுக் கொண்டே இருப்பார்கள் என்பது ஸ்ரீ குப்புஸ்வாமி சிரௌதிகளுக்குத் தெரியும். இந்தக்கவலை சாஸ்த்ரிகளுக்கு இருக்கக் கூடாதென்று சிரௌதிகள் தான் வந்து சேர்ந்தவுடனேயே, வாசல் தாழ்வாரத்திலிருந்தபடியே "சம்போ, மஹாதேவ" என்று சிவநாமங்களை உரத்த குரலில் சொல்லுவார். இந்த சப்தம் கேட்ட மாத்திரத்தில், வந்திருக்கும் ஆசார்யனை வரவேற்கும் முறையில் வீட்டுக்குள்ளிருந்த சாஸ்த்ரிகளிடமிருந்து "சிவ, சங்கர, மஹாதேவ" என்ற பதில் கோஷம் கிளம்பும். இதன்பின் அவர்கள் இருவரும் அவரவர் காரியத்தைக் கவலையில்லாமல் கவினத்துக் கொண்டிருந்துவிட்டு, சடங்கு ஆரம்பிக்க வேண்டிய சரியான வேளையில் தான் சந்தித்துக் கொள்வார்கள்.

ஸ்ரீ A.ஸாம்பமூர்த்தி அய்யர் தனது பெரியப்பாவைப் பற்றின அனேக ருசிகரமான தகவல்களை ஞாபகப்படுத்திக் கொள்வது வழக்கம். ஆங்கிலப் படிப்பை மேற்கொண்ட அவருக்குச் சிறுவயதிலிருந்தே காபி குடிக்கும் பழக்கமும் தொத்திக் கொண்டது. அக்காலத்தில் காபி குடிப்பது என்பத மிகவும் நவீனமான ஒரு பழக்கம். பெரியவாள் இந்தப்பானம் தயார் செய்ய உபயொகப்படத்தும் மூலப்பொருள் யாதென்று வினவ ஸ்ரீ அய்யர் நம் நாட்டிலேயே விளையும் ஒரு தாவரச்செடியின் காயிலிருந்துதான் தயார் செய்யப்படுகிறது என்று விளக்கி அவர்களுக்கு மனச்சமாதானம் ஏற்படத்தினார். இம்மாதிரி விஷயங்களில் சாஸ்த்ரிகள் தனது சகிப்புத் தன்மையைப் பெருந்தன்மையுடன் காட்டுவது வழக்கம். அவர்கள் பார்ப்பதெல்லாம் எந்த விஷயத்திலும் தர்மசாஸ்த்ர விதிகளுக்கோ, பழக்கத்திலிருக்கும் ஸதாசார முறைகளுக்கோ

குறிப்பாக எவ்விதத்திலும் விசேஷமான ஆட்சேபனை இருக்கவில்லையென்று விசாரித்துத தெரிந்து கொண்டு திருப்தியானால் போதும்.

ஸ்ரீ அய்யர் தனக்கு ஒரு சமயம் ஏற்பட்ட விபத்தைப் பற்றின முன்னெச்சரிக்கையைத் தனது பெரியப்பா சொன்னாரென்றால் அது அவர்களிடமுள்ள (பெரியவாளே இதைப் பற்றிய உணர்வு இல்லாமலிருந்தாலும் கூட) தெய்வீகமான அதிசய சக்தி தான் என்று திடமாகச் சொல்லுவார். ஒரு சமயம் ஸ்ரீ A.மஹாலிங்க அய்யர் பெரியப்பாவைப் பார்க்க மன்னார்குடி வந்துவிட்டு விடைபெற்றபோது பெரியவாள் தற்சமயம் சென்னை சென்றிருக்கும் அவருடைய தம்பி ஸ்ரீ ஸாம்பமூர்த்திக்கு மிகவும் கஷ்டகாலம் என்று தனக்குத் தோன்றுவதாகக் குறிப்பிட்டார்கள். அதற்கு ஸ்ரீ மஹாலிங்க அய்யர் தனக்கு சமீபத்தில்கூட சென்னையிலிருந்து தபால் வந்ததாகவும் அந்தத் தகவலின்படி ஸ்ரீ ஸாம்பமூர்த்தி நன்றாகவே தான் இருக்கிறான், எந்தவிதமான கவலைக்குமிடமில்லையென்று முத்தண்ணாவை (அப்படித்தான் குடும்பத்தில் எல்லோரும் பெரியவாளைக் குறிப்பிடுவது வழக்கம்) சமாதானப்படுத்தினார்.

மதுரைக்குப் போகக்கிளம்பிய ஸ்ரீ மஹாலிங்க அய்யர் வழியில் நீடாமங்கலத்தையடைந்த போது, அப்பொழுது சென்னை சென்று திரும்பியிருந்த ஒரு குடும்ப நண்பரைச் சந்திக்க நேர்ந்தது. ஸ்ரீ ஸாம்பமூர்த்தி அய்யர் சென்னையில் ஒரு ஜட்காவிலிருந்து விழுந்து, கால் முறிந்து தற்போது ஒரு ஆஸ்பத்திரியில் தேறி வருவதாக அவர் சொன்ன தகவல் ஸ்ரீ மஹாலிங்கய்யரைத் திடுக்கிடச் செய்தது. பெரியவாள் கொடுத்த எச்சரிக்கை ஞாபகத்துக்க வரவே, அப்படியே நேராகச் சென்னைக்குக் கிளம்பினார்.

இந்த விபத்தின் காரணமாக ஸ்ரீ ஸாம்பமூர்த்தி அய்யர் வாழ்நாள் பூராவுமே விந்தி விந்தித்தான் நடக்க முடிந்தது.

## பதினான்காவது அத்தியாயம்

# பேரனும் கொள்ளுப்பேரனும்

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளின் பேரன் சி. யக்ஞஸ்வாமிக்கு ஏழாவது வயதில் உபநயனம் செய்து வைத்தார்கள். உடனேயே சமீபத்தில் குடியிருந்த தனக்கு சம்பந்தி வழியில் உறவினரும் சிஷ்யனுமான, பிரம்மஸ்ரீ ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகளிடம் வேதாத்யயனம் செய்வதற்காக பேரன் அனுப்பப்பட்டான். ஒரு நாள் வேதம் சொல்லிக் கொடுத்து வந்த அந்த வாத்தியார் அந்தச்சிறு குழந்தையை பாடம் க்ரஹிப்பதில் கொஞ்சம் பின்தங்கினானென்பதற்காக, ஒர புளிய மிளாறால் மிகவும் கொடூரமாக விளாசிவிட்டார். சாஸ்த்ரிகளின் பார்யை துக்கத்தினாலும் கோபத்தினாலும் பதறிப்போய் அழுது கொண்டிருந்த பேரனை சாஸ்த்ரிகளிடம் அழைத்துப்போய் "குழந்தையை அந்த நெஞ்சில் ஈரமில்லாத கொடும்பாவியிடமா அனுப்ப வேண்டும்? இந்தக் குழந்தைக்கு நீங்களே பாடம் சொல்லிக் கொடுக்கச் சிறிது நேரம் ஒதுக்கிக் கொள்ளக் கூடாதா? பாருங்கள், குழந்தைக்கு எப்படி ரத்தம் கசிகிறது" என்று கதறினாள். சாஸ்த்ரிகள் மெதுவாகப் பதில் சொன்னார்கள். "நீ உன் பேரனை அதிகமாக லாலனை செய்தால் அவன் வித்யையை அடைய முடியாது", மேலே எந்தப் பேச்சோ எண்ணமோகூட இல்லாமல் இந்த விஷயம் விடப்பட்டது.

பேரனுக்கு வேதாத்யயனம் பூர்த்தியானவுடன், சாஸ்த்ரிகள் அவனுக்கு காவ்யங்களும், தர்க்க சாஸ்த்ரத்தில் இளநிலை பாடங்கள் கற்பிப்பதற்கும் ராதாநரஸிம்மபுரம் நீலகண்ட தீக்ஷிதரிடம் அவனை ஒப்படைத்தார்கள். இப்பாடங்களில் போதுமான அஸ்திவாரப் பயிற்சி அடைந்தவுடன், பேரனைத் தான் நடத்தும் தர்க்க, வ்யாகரண வகுப்புகளில் சிஷ்யர்களுடன் உட்கார்ந்து பாடம் கேட்க அனுமதித்தார்கள். பைங்காநாடு

கணபதி சாஸ்த்ரிகள்-யக்ஞஸ்வாமிக்கு நெருங்கிய நண்பனாக இருந்தவர்-அவர் கூடப்படித்த ஸஹமாணவர்களில் கொஞ்சம் வயதானவர். யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் வெகு சீக்கிரத்திலேயே எல்லா சாஸ்திரங்களிலேயும் பாரங்கதராக ஆய்விட்டார். முக்கியமாகத் தர்க்கத்திலும், வேதாந்த சாஸ்திரத்திலும் அவர் அதிசயக்கத்தக்க நிபுணராக விளங்கினார். மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் பாடங்கள் முடியும் தறுவாயில் இருந்தபொழுது மஹோபதேசகரான பெரியவாளின் போதனைகளைக் கேட்க வேறு சந்தர்ப்பம் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற ஆவலில் பழைய மாணாக்கர்கள் பலரும் வகுப்புகளில் வந்து உட்காரத் தொடங்கினார்கள்.

அவ்வமயம் கணபதி அக்ரஹாரம் என்ற ஊரில் ஸ்ரீ S.குப்புஸ்வாமி சாஸ்த்ரிகளுக்கு சாஸ்த்ர பாடங்கள் நடத்தி வந்த பெரியவாளின் பழைய சிஷ்யரான பழமாநேரி ஸ்வாமிகள் அந்தப் பாடத்தை ஒர வருட காலத்திற்கு நிறுத்தி வைத்துவிட்டு மறுபடியும் தனது ஆசானிடமிருந்து பெருகும் அறிவு ஊற்றைப் பருகித் தனது அறிவைப் புதுப்பித்துக் கொள்ள விரும்பியவராய் மன்னார்குடி வந்து இந்த வகுப்புகளில் உட்கார்ந்து கொண்டார். தனது மாணாக்கர் ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்த்ரியிடம் ஒரு வருடம் கழித்து தனது அறிவை இன்னும் த்ருடமாகப் பெருக்கிக் கொண்டு பிறகு மீமாம்ஸா பாடம் நடத்துவதாக வாக்களித்துவிட்டு வந்திருந்தார். அதே போல் பெரியவாளிடம் புனஃபடனத்தை முடித்துக் கொண்டு தனது அறிவைத் திரும்பவும் கூர்மையாக்கிக் கொண்ட கணபதி அக்ரஹாரம் திருப்பி வந்த ஸ்வாமிகளிடம் மீமாம்ஸா பாடம் கேட்டறிய வாய்ப்புபெற்ற ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்த்ரிகள் பெரிய அதிர்ஷ்டசாலி என்று தான் செல்ல வேண்டும்.

வெகு இளம் பிராயத்திலேயே ஸ்ரீ யக்ஞஸ்வாமி கவிதைகளிலும் ஸங்கீதத்திலும் தனக்கிருந்த அத்யந்த ருசியை வெளிப்படுத்தத் தொடங்கினார். ஒரு சமயம் சில கனவான்கள் பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளையணுகி, தேவ பூஜைக்குத் தேவையான

மலர்கள் கொடுக்கும் புஷ்பச்செடிகள் கொண்ட ஒரு நந்தவனம் அமைக்கப் போவதாகவும் இந்த தர்ம கைங்கர்யத்தை சிலாகித்துப் பொது மக்கள் பார்வைக்கு அனுப்ப ஸம்ஸ்க்ருத சுலோகங்கள் கொண்ட ஒரு பத்திரிகை எழதிக் கொடுக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். சாஸ்த்ரிகள் தனது பேரனைக் கூப்பிட்டு பத்திரிகையில் போடுவதற்குப் பொருத்தமான சுலோகங்களைக் கவனம் செய்து கொண்டு வா பார்ப்போம் என்றார்கள். அதை ஏற்றுக் கொண்டு பேரனும் உடனேயே ஒரு பத்திரிகை தயார் செய்து காட்டின பொழுது சாஸ்த்ரிகள் தனது பேரனுக்குள்ள கவிதை புனையும் மேதா விலாசத்தின் அதிஉன்னதரகத்தைப் பார்த்து அதிசயித்ததோடு, மிகவும் திருப்தியும் அடைந்தார்கள். இதை வெளிப்படையாகவும் இம்மாதிரி கூறினார்கள். "குழந்தாய்! இந்த சுலோகங்களை நீ எழுதினாய் என்றால் ஒருவரும் நம்பமாட்டார்கள். எல்லோரும் இவற்றைக் கவனம் செய்தது நான்தான் என்று உறுதியாகச் சொல்லுவார்கள்."

ஸ்ரீ யக்ஞஸ்வாமிக்கு அபாரமான ஸங்கீத ஞானமிருந்தது. அவரது சாரீரமோ வசீகரமான இனிமையுடன் கூடியதாக இருந்தது. அவர் ஸங்கீத மேதை மஹா வைத்திய நாதய்யர் அவர்களின் பாட்டுக் கச்சேரிகளைப் பல தடவைகள் கேட்கும் சந்தர்ப்பங்கள் கிடைத்துத் தனது ஞானத்தை நல்ல வழியில் விருத்தியும் செய்து கொண்டிருந்தார். சாஸ்த்ரிகள் வசித்த வீட்டின் கீழ்ப்புறத்தில் தனிமையான ஓர் அறையுள்ள ஒரு விஸ்தரிப்பு இருந்தது. அதில்தான் ஸ்ரீ யக்ஞஸ்வாமி தனது ஓய்வு நேரங்களில் கையில் தம்புராவுடன் உட்கார்ந்து கொண்டு வேணுகானம்போல் மனதைக் கவரும் தனது இனிமையான குரலில் கர்னாடக ராகங்களை ஆலாபனை செய்து கொண்டோ அல்லது மெட்டுக்களை இசைத்துக் கொண்டோ இருப்பது வழக்கம்.

பெரியவாள் பேரனுக்கு ஸங்கீதத்தில் உள்ள ஈடுபாட்டை ஒப்புதலுடன் சந்தோஷமாக கவனித்து வந்தாரா இல்லையா என்று

ஒருவராலும் அறுதியிட்டுச் சொல்ல முடியாவிட்டாலும் ஒன்று மாத்திரம் நிச்சயம் சொல்லலாம். அதாவது பேரனுக்கு ஸங்கீதத்தில் இருக்கும் ஈடுபாட்டில் பெரியவாளுக்கு துளிக்கூட அதிருப்தி இருந்ததாக எந்தச் சமயத்திலும் வெளிப்படுத்திய தில்லை. ஆசாரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்த அந்தக் காலத்தில், சாஸ்த்ரிகளைப் போல் கடுமையான ஆசார அனுஷ்டானங்களோடு வாழ்ந்து வந்த ஒருவர் தன்னால் தயாரிக்கப்பட்டு சாஸ்த்ரங்களில் முதிர்ச்சியடைந்து பிற்காலத்தில் பிரசாரம் மேற்கொள்ள வேண்டியவன், தானே கடுமையான ஆசாரத்துடன் வைதீக வாழ்க்கை நடத்த வேண்டிய ஒரு யுவன், ஸங்கீதத்தில் மனதையலையவிட்டு, இளவயது சாபல்யங்களோடு இருப்பதைக் கண்டால் பல்லைக் கடித்துக் கொண்டு கண்டிக்கத்தான் செய்வார் என்றுதான் எதிர் பார்ப்போம். ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை. சாஸ்த்ரிகளே நல்ல ஸங்கீத ரஸிகர்களாக இருந்தார்கள். ஸங்கீத மேதைகளான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸ்ரீ தியாகய்யவாள் முதலியவர்களைப் பெரிதும் மதித்து வந்தார்கள்.

திருவையாறு முனிவரான ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளைப் பற்றி சாஸ்த்ரிகள் தனது குழந்தைப் பருவத்தில் கேள்விப் பட்டிருந்தும், தான் ஒரு தடவைகூட அம்முனிவரை நேரில் சந்திக்க முடியவில்லையே என்று வருத்தப்பட்டதாகச் சொல்லுவார்கள். ஸங்கீதம் அப்யஸித்துக் கொண்டிருந்த ஒரு இளவயது மாணாக்களை சாஸ்த்ரிகள், அவன் ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் கீர்த்தனைகளைப் பாடும்போது, அவைகள் மந்த்ர பூர்வகமாக இருப்பதால் சரியான உச்சரிப்புடன் சுத்தமாகப் பாடப்பட வேண்டும் எனக் கண்டித்தாராம். அவர்கள் மேலும் சொல்லுவார்கள், "தியாகராஜ ஸ்வாமி கிருதிகளை இளநிலை யிலிருக்கும் மாணாக்கனும் அப்யஸிக்கலாம். ஆனால் தீக்ஷிதரின் கிருதியை பக்குவமடைந்த வயது வந்தோரே கற்கும் யோக்கியதை உடையவர்களாவார்கள்".

சாஸ்த்ரிகள் மஹா வைத்தியநாத சிவன் அவர்களின் பாட்டை மிகுந்த ஆசையுடன் கேட்பார்கள். இனிமையான சாரீரம் படைத்தவராக இருந்ததாலும், ராக பாவத்துடனும், ஸுஸ்வரத்துடனும் படிக்கிறார் என்ற காரணத்தாலும், தனது சிஷ்யர்களுள், ஸ்ரீ அப்பாஸாமி சாஸ்த்ரி என்பவரையே தனக்கு மஹாபாரதம் படிப்பதற்கு நியமிப்பது வழக்கம்.

பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளே சிவபூஜை செய்யும்போது காம்போஜி ராகத்தில் இசைத்துத்தான் அர்ச்சனை செய்வார்கள் என்று எனது தகப்பனார் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

சாஸ்த்ரிகளுக்கு 82 வயதாகியிருந்த பொழுது, அதாவது கி.பி. 1897ல் அவர்களின் பர்ாயை சிறிது காலம் நோய்வாய்ப்பட்டு இருந்துவிட்டு சிவனடி சேர்ந்தார்கள். தனக்கு ஒரு கொள்ளுப்பேரன் பிறந்து பார்க்கவில்லையேயென்பது அவளுக் கிருந்த கடைசி மனக்குறையாகும். அப்பொழுது நிறை கர்ப்பிணியாக இருந்த அவள் பேரன் அகமுடையாளுக்கு நிச்சயமாக வெகு சீக்கிரத்தில் ஓர் ஆண்குழந்தைதான் பிறக்கப் போகிறது என்று சாஸ்த்ரிகள் "அவளுக்கு த்ருடமான நம்பிக்கையளித்ததோடு "நீ எந்த மனக்குறையுடனும் இறக்கக் கூடாது. குழந்தை இப்பொழுது பிறந்துவிட்டதாகவே எண்ணிக்கொள். அந்தக் கொள்ளுக் பேரனை நீ உன் மடியில் வைத்து லாலனை செய்வதாகவும் எண்ணிக்கொள்" என்றார்கள். அந்த தர்மபத்னியும் "அந்த ஸந்தோஷ நிகழ்ச்சி நடந்து விட்டதாகவே பாவித்துக் கொண்டேன். இப்பொழுது எனது மனது பூர்ண திருப்தியடைந்துவிட்டது" என்று சொல்லிக் கொண்டே உயிர் நீத்தார்கள்.

அவளின் சடலத்தை இடுகாட்டுக்கு எடுத்துச் சென்ற பொழுது கண்களில் நீர் பெருக "என்னடைய அக்னிஹோத் திரத்தையும் எடுத்துக் கொண்டு அதோ அவள் போகிறாள்" என்ற கூறிவிட்டுக் கதறினார்கள். ஏனெனில் பத்னி உயிருடன் இருக்கும் காலம் வரை தான் ஒரு கிருஹஸ்தனுக்கு "அக்னி

ஹோத்திரம்" செய்யும் அதிகாரம் உண்டு. சாஸ்த்ரிகளுக்கு கர்மானஷ்டானங்களில் இருந்த விசேஷ ஈடுபாடு காணரமாக அக்னிஹோத்திர கர்மாவுக்கு தனக்கு அதிகாரம் வழங்கிய தர்மபத்னி போகும்பொழுது அந்தக்கர்மாவும் இனி செய்ய முடியாமலாகிவிட்டதோ என்ற எண்ணமும் பத்னியை இழந்ததால் ஏற்பட்ட அவரது துக்கத்தை இன்னும் பன்மடங்கு தீக்ஷ்ணமாக்கியது.

பார்யை மறைந்து இரண்டு மாதமே ஆகியிருந்த சமயம் அவளுக்குக் கடைசி காலத்தில் அவர் ஊட்டியிருந்த நம்பிக்கை பிரகாரமே சாஸ்த்ரிகளுக்கு ஒரு கொள்ளுப்பேரன் (இந்தக் கொள்ளுப்பேரன் தான் ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளின் ஸீமந்த புத்திரன் "கவி ஸார்வ பௌமம" ஸ்ரீ Y.மஹாலிங்க சாஸ்த்ரி, MA.,B.L.,) பிறந்தான். சில மாதங்கள் வளர்ந்திருந்த அக்குழந்தை ஒரு நாள் கூடத்தில் தரையில் போடப்பட்டிருந்தது. கபடமில்லாத பார்வை, புன்சிரிப்பு, இவைகளுடன் அக்குழந்தை கை கால்களைஉதறிக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தது. பூஜை செய்வதற்காக உள்ளறைக்குச் சென்று கொண்டிருந்த சாஸ்த்ரிகள் குழந்தையைப் பார்த்தவுடன் தனது கையிலிருந்த தீர்த்தஜாரியைக் கீழே வைத்துவிட்டுக் குழந்தையின் பக்கத்தில் உட்கார்ந்து அதைத் தலையிலிருந்து கால்வரை மிருதுவாக வருடிக் கொண்டே தனது மனம் பாசத்தாலும் பேரன்பாலும் பொங்கி வழிய, இப்படித் தனக்குத் தானே சொல்லிக் கொண்டார்கள். "எனது பேரனை நமது குலவழக்கப்படி சாஸ்த்ரப் படிப்பில் என்னால் நிர்ப்பந்தப்படத்தி ஈடுபடத்த முடிந்தது. ஆனால் உன் விஷயத்தில் என் யோசனை எடுபட வாய்ப்பில்லை. நிச்சயம் உன்னை ஆங்கிலப் படிப்பில்தான் போடப் போகிறார்கள். எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். எந்தவிதமான கல்வியில் நீ போடப்பட்டாலும் அந்தத் துறையில் பாரங்கதனாக நீ ஆவாய் என்று ஆசீர்வதிக்கிறேன்".

கொள்ளுப்பேரக் குழந்தை தவழுவதற்கு ஆரம்பித்திருந்த சமயம், ஒரு நாள், பாடம் சொல்ல வெளியே வந்து கொண்டிருந்த

சாஸ்த்ரிகள் அக்குழந்தையை இரு கைகளாலும் அனைத்துத் தூக்கிக் கொண்டு பாடம் கேட்க உட்கார்ந்திருந்த சிஷ்யர்கள் மத்தியில் இருந்த பழமாநேரி ஸ்வாமிகள் முன் கீழேவிட்டு "கடாக்ஷ்யதாமயம் சிசு:" இந்தக் குழந்தையை பார்த்துத் தாங்கள் ஆசீர்வதிக்க வேணும்" எனக் கேட்டுக் கொண்டார்கள்.

கொள்ளுப்பேரனுக்கு ஐந்து வயது முடிந்த பொழுது அவனுக்கு அக்ஷராப்யாஸத்தை பெரியவாளே தானே நேரில் நடத்தி வைத்தார்கள்.

## பதினைந்தாவது அத்தியாயம்

## அந்திம நாட்கள்

தனது 86வது வயது வரை பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் ஸ்மிருதிகள், குலாசாரம் இவைகளின்படி ஒரு கிருஹஸ்தனுக்க விதிக்கப்பட்ட கர்மானுஷ்டானங்கள், ஆசாரம், கடமைகள் இவற்றை மிகுந்த பயபக்தியுடன், உண்மையான நம்பிக்கை யுடனும் கொஞ்சம்கூட குற்றம் குறைக்கு இடமில்லாமலும் சிறு தவறுதலோ, ஆலஸ்யமோ இல்லாமல் மிகவும் கண்டிப்புடன் நடத்தி வந்தார்கள். அந்த வயது வரை அவர்கள் சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்லுவதையும் நிறுத்தவில்லை. 87வது வயதை அடைந்த பொழுது அவர்களது தேகக்கட்டு தளர்ந்து வீட்டுக்குள்ளேயே நடமாடுவதற்குக் கூட பிறர் உதவி தேவைப்பட்டது. இக்காலத்தில் பெரியவாளின் மாட்டுப்பெண், மங்களாம்பாள் அவர்களுக்குத் தேவையான பணிவிடைகளை மிகவும் சரத்தையோடு கவனித்து வந்தார்கள். பெரியவாளுக்கு இப்படிப் பணிவிடைகள் செய்த மங்களாம்பாள் ஒவ்வொருவருடைய பெருமதிப்புக்கும் பாத்திரமானார்கள். ஒரு சமயம் தனது குருவான பெரியவாளைப் பார்த்து வந்தனம்

செய்துவிட்டுப் போகவந்த பிரம்மஸ்ரீ பருத்தியூர் கிருஷ்ண சாஸ்த்ரிகள் வயது முதிர்ந்தோருக்கு பணிவடை செய்வது என்ற புனித வைங்கர்யத்தில் இவ்வளவு பக்தி சிரத்தையுடன் ஈடுபட்டிருக்கும் மாட்டுப் பெண்ணை வாயாரப் புகழ்ந்தார்கள். இதைக்கேட்ட பெரியவாள் "அவள் எனக்கு மாட்டுப்பெண் மட்டுமல்ல. இப்பொழுது எனக்கு அவள் ஒரு தாயாராகவும் இருக்கிறாள்" என்று மொழிந்தார்.

நாள் ஓட ஓட படுக்கையைவிட்டு நகரமுடியாத அளவுக்கு பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளுக்கு தள்ளாமை ஏற்பட்டது. சாஸ்தரிகளுக்கு சுபகிருத் வருஷத்தில் (1902-03) 88வது வயது ஆரம்பித்த சமயம் கடுமையான இருமல் ஏற்பட்டது. உடனேயே தனது முடிவு நெருங்குகிறது என்று உணர்ந்து தனது ஸ்வீகாரக்குமாரன், ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரைத் (இவரைக் கண்டு தீக்ஷிதர் என்று எல்லோரும் கறிப்பிடுவார்கள்) தன்னிடம் அழைத்துச் சொன்னார்கள்.

இனி அதிக நாள் வாழக்கூடும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. எனக்கு அப்படி வாழ்வதில் அக்கறையுமில்லை. எனது அந்நிய காலத்தைச் சந்திப்பதற்குத் தயாராக இருக்கிறேன். உனக்கு நான் சொல்ல விரும்புவது என்னவென்றால் இப்பொழுது போல் எப்பொழுதும் ஸதாசாரத்தைத் தொடர்ந்து கொஞ்சமும் குறைபாடில்லாமல் அனுஷ்டித்து வர வேண்டும். மேலும் சிவபூஜையில் முழுமனதுடன் நீ உன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்றார்கள்."

பிறகு அன்பும் மரியாதையும் ததும்ப பக்கத்தில் பவ்யமாக நின்று கொண்டிருந்த பேரனை நோக்கிப் பேசவானார்.

"இந்த இருமல் பிரம்மானந்த ஆத்மானுபவ நிலைக்கு என்னையழைத்துப் போக வந்த ஒர மறைமுகமான அனுக்ரஹம் என்று தான் நான் கருதுகிறேன். அறிவை விருத்தி செய்து கொள்ள உன்னைத் தேடி வருபவர்களுக்குப் பாடம் சொல்ல வேண்டிய கடமையை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். மகான் ஸ்ரீ

அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் உத்தமமான கிரந்தங்களைப் படிப்பதிலேயே உன் காலம் கழிய வேண்டும். அதனால் நாளாவட்டத்தில் உனக்கு சிவபக்தி நன்றாக வேரூன்றி வரும். உண்மையான ஆனந்தம் ஐச்வர்யத்திலோ உலகத்தில் ஒருவர் வகிக்கும் பதிவியிலோ இல்லை. மனத்திருப்தி, பரிசுததமான வாழ்க்கை, பிறரிடம் அன்பு செலுத்துவது, எந்த விஷயத்தையும் சரியானபடி மதிப்பிடும் திறமை ஈச்வரனிடத்தில் உண்மையான பக்தியும் இருப்பவனுக்குத் தான் பேரானந்தம் கிட்டுகிறது."

இந்த புத்திமதிகளைச் சொன்ன பிறகு, மறுபடியும் தனது பல்லில்லா முகத்தில் ஸந்துஷ்டியுடன் மலரும் மந்தஸ்மிதப் புன்சிரிப்புடன் பேசலானார்.

"இதோ என்னைப்பார்! அடுத்த உலகத்திற்குக் கிளம்ப நான் உறுதியுடனும், நிச்சயமான நன்னம்பிக்கைகளுடனும் எப்படித் தயாராயிருக்கிறேன்!" இப்படிச் சொல்லிக் கொண்டே நிமிர்ந்து பார்த்தபொழுது பேரன் கண்ணில் நீர் தாரையாகப் பெருக அழுது கொண்டிருப்பதைக் கண்டு மேலும் இளகிய மனதுடன் ஆச்வாசப்படுத்த ஹிதமான வார்த்தைகளைச் சொன்னார்.

"அழாதே! குழந்தாய்! நடக்க வேண்டியது நடந்து தானே தீரும்? புத்தியுள்ள மனிதன் எவனும் இந்த மாமிசப் பிண்டம் இயற்கைக்குத் தான் பட்டிருக்கும் கடனை முடிவாகக் கொடுக்க வேண்டியிருப்பதற்கு வருத்தப்பட மாட்டான். பூமண்டலத்தில் ஜயபெரிகை கொட்டிய எத்தனை பராக்கிரம சாலிகள், அதிபுத்திமான்களான எத்தனை சிந்தனையாளர்கள் இந்த மரண தேவதையால் உலகின் கண்ணிலிருந்து அப்பப்போ வெளியேற்றப்பட்டிரக்கிறார்கள்? அறியாதோரல்லவோ இந்த பூத உடலின் அழிவைக் கண்டு வருத்தப்படுவர்? புத்திமானின் கவனம் அழிவற்ற ஆத்மாவை நோக்கியல்லவா இருக்கும்?" மேலும் பகவத்கீதையில் கூறப்பட்டிருக்கும் கர்மாக்களைச் செய்யும்போது கடைப்பிடிக்க வேண்டிய தன்னலமற்ற

கொள்கைகளைப் பற்றி சில உபதேச மொழிகளையும் சொல்லி முடித்தார்கள்.

சாஸ்த்ரிகளின் இந்த அந்திய நாட்களில் வீட்டிற்கு அடிக்கடி பார்வையாளர்கள் வந்த வண்ணம் இருந்தார்கள். சிஷ்யர்கள், உறவினர்கள், உயர் அதிகாரிகள், பெரிய பண்டிதர்கள், பெரியவாளிடம் மிகுந்த ஈடுபாடுள்ள நண்பர்கள், இப்படிப் பலதரப்பட்ட மனிதர்கள் பெரியவாளைக் கடைசியாக ஒர தரம் தரிசனம் செய்ய வேண்டுமென்ற ஆவலுடன் வந்தார்கள். இந்த சமயத்தில்தான் பெரியவாளின் சிஷ்யரும் அழகுப்பிராஸங்களுடன் கூடின கோர்வையான அடுக்கு மொழிகளால் கவர்ச்சியாக இராமயணப் பிரசங்கங்கள் செய்து தென்னிந்தியா முழுவதும் பெரும் புகழ் எய்தியிருந்த பிரம்மஸ்ரீ பருத்தியூர் கிருஷ்ண சாஸ்த்ரிகள் தனது கலையைப் பெரியவாளுக்கு அர்ப்பணிக்கும் விதமாக அவர்களின் முன்னிலையிலேயே ஒரு மாதத்திற்கு மேல் இராமாயணம் சொன்னார்கள். இந்த உபந்யாஸத்தின்போது பெரியவாள் ஒரு பீடத்திலமர்ந்து பின்னால் வைக்கப்பட்டிருக்கும் பலகையில் சாய்ந்து கொண்டு சிரவணம் செய்வார்கள். வீட்டில் குறிப்பிட்ட சில நபர்கள் மட்டும் பிரவசனத்தைக் கேட்க வருவார்கள். அங்கு பக்தி பூர்வகமான நிசப்தம் நிலவும், ஸ்ரீ பருத்தியூர் கிருஷ்ண சாஸ்த்ரிகள் கடந்த முப்பது வருஷங்களுக்கும் லோகத் தொடர்ந்து இராமாயணப் பிரவசனங்கள் செய்த அனுபவத்தால் அக்கலையில் தான் பெற்றிருக்கும் முதிர்ச்சியையெல்லாம் கையாண்டு ஸ்ரீராமபிரானின் பெருமைகளையும் குணாதிசயங்களையும் பாடுவார். பெரியவாள் அதில் முழுமையாக லயித்து கண்களை மூடியபடி அமர்ந்திருப்பார்கள். வார்தக்கியத்தல் ஏற்படும் தள்ளாமை அதிகமாக இருந்த காரணத்தால் அவர்களின் தலை அப்பப்போ ஒரு பக்கமாகச் சாய்ந்துவிடும். அப்பொழுதெல்லாம் பக்கத்தில் இருந்து கவனித்துக் கொள்பவர்கள் தலையைத் தூக்கி நிமிர்த்தி சரியாக வைப்பது வழக்கம்.

கார்த்திகை மாதத்தில் அதாவது 1902 நவம்பர் மூன்றாவது வாரத்தில் பெரியவாள் சாஸ்த்ர முறைப்படி தனக்குப் "பிராயச்சித்தம்" செய்துகொள்ள வேண்டுமென விரும்பினார்கள். அப்படியே ஏற்பாடாயிற்று. அந்தச் சடங்கில் கணக்கற்ற வேதப்பிராமணர்கள் கலந்து கொண்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் பெரியவாளுக்காக இந்தச் சடங்கு என்பதைவிட தங்கள் பரிசுத்திக்கே செய்யும் கார்யமாக எண்ணினார்கள். சரஸ்த்ரிகளின் தம்பி பிள்ளைகளான திருவாரூர் ஸ்வாமி தீக்ஷிதரும், மதுரை மஹாலிங்க அய்யரும் "பிராயச்சித்த" கர்மா நடந்த பொழுது கூடவே இருந்தார்கள். பெரியவாள் "பிராயச்சித்தம்" செய்து கொள்கிறார்கள் என்ற விஷயம் வெளியே பரவியவுடன், அவர்களைக் கடைசியாகத் தரிசிக்க வேணுமெனக் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் வரலானார்கள்.

ஆனால் ஸூப்ரமண்ய ஜோஸியர் என்ற ஜோதிட நிபுணர் அந்த சாஸ்த்திர முறையில் பலவிதக் கணக்குகள் போட்டு பெரியவாளின் நிர்யாணம் இன்னும் மூன்று மாதம் கழித்துத் தான் ஏற்படும் என்று சொல்லிவிட்டார். பெரியவாளின் தேக ஸ்திதியைக் கண்ட எவரும் அவ்வுடல் அவ்வளவுநாள் தாங்கக் கூடுமென்று நம்பவில்லை. அப்படியிரந்தும் உண்மையில் மூன்று மாதம் கழிந்தது மட்டுமில்லை, ஜோதிடர் கணித்துக் கொடுத்திருந்த அதே தினத்திலேயே அதாவது மாசி மாதம் 21ந் தேதி புதன்கிழமை (04.03.1903) யிலேயே நிர்யாணம் சரியாக நிகழ்ந்தது. அந்த தினத்தில் நிர்யாணம் ஏற்படும் நேரத்தைக் கணிப்பதில்தான் ஜோதிடர் சிறு பிசகு செய்தார் என்று சொல்லலாம். அவர் நண்பகல் நாழிகை 15க்கு ஏற்படும் என்று குறித்திருந்த நிர்யாணம் நள்ளிரவு 15 நாழிகைக்கு ஏற்பட்டது.

அந்திம காலத்திற்கு முன் கடந்த நான்கைந்து மாதங்களும் பெரியவாள் முடிய கண்களுடன் படத்த படுக்கையாகவே இருந்தார்கள். இப்படி அப்படிப் புரளுவதுகூட மிகவும் அபூர்வம். அவர்களது உடையும் படுக்கையும்

அவ்வப்போது மாற்றப்பட்டு வந்தன. அவருக்கு ஆகாரம் பால்தான். அதுவும் சிறிய தேக்கரண்டியால் வாயில் விடுவார்கள். சாப்பிட வேண்டிய நேரம் என்று கூப்பிட்டால் கண்ணைத் திறந்து பார்ப்பார்கள். உடனே ஒரு ஈரத்துணியால் அவர்களது நாக்கைச் சுத்தம் செய்துவிட்டு சில துளிகள் பாலை வாயில் விடுவார்கள். எப்பொழுதும் அவர்கள் ஏதோ மந்திரத்தை உச்சரித்துக் கொண்டோ அல்லது புனிதமான ஈச்வர நாம ஸங்கீர்த்தனமோ செய்து கொண்டேயிருந்தார்கள் என்பது அவர்களின் உதடுகள் மெல்ல அசைவதிலிருந்து ஊகிக்க முடிந்தது. அவரது சுய உணர்வு நல்ல தெளிவாகவும் தீக்ஷண்யமாகவும் இருந்ததென்றே சொல்ல வேண்டும். ஏனெனில், தன்னைப் பார்க்க வரும் பண்டிதர்கள் சிலர் தங்களது துயர உணர்வுகளை சந்தர்ப்பத்துக்கேற்றாற்போல் ஸம்ஸ்கிருதத்தில் சொல்லுங்கால், ஏதாவது இலக்கணப் பிசகான வார்த்தை உபயோகிக்கப்பட்டால் சாஸ்த்ரிகள் அதை அப்போதைக்கப்போது திருத்தத் தவறமாட்டார்கள்.

மூச்சு நிற்கும் தறுவாயிலிருந்த கடைசி நிமிடங்களில், சுற்றியிருந்த சிஷ்யர் கூட்டம் உபநிஷத் வாக்கியங்களையும் வேத மந்திரங்களையும் ஓதிய வண்ணம் இருந்தார்கள். அந்த நேரத்தில் செய்யவேண்டிய வைதீனக் காரியங்களில் பிள்ளை மும்முரமாக ஈடுபட்டிருக்க, பேரன் தனது பேரன்புள்ள குருவின் காலடியில் கண்ணீரும் கம்பலையுமாய் உட்கார்ந்திருந்தான்.

அப்பெரிய ஆசான் மறைந்து விட்டார் என்ற செய்தி பரவியவுடன், அந்த நகரமே சோகத்தில் மூழ்கியது. அவ்வூரிலுள்ள காரியாலயங்கள், பள்ளிக்கூடங்கள், வெஸ்லேயன் மிஷன் காலேஜ் உள்பட எல்லா நிறுவனங்களும் மஹாவித்வானாகவும். மஹோபதேசகராகவும் இருந்து வந்த அந்த மாமுனிவரின் மறைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அன்று மூடப்பட்டன.

சாஸ்த்ரிகளின் இறுதி ஊர்வலம் அவ்வூரில் இதற்குமுன் பார்த்திராத, மனதில் பதியக்கூடிய நிகழ்ச்சியாக இருந்தது. அந்த நகரவாசிகள், பிராம்மணர்கள், இதரர்கள், அதிகாரிகள்,

உத்தியோகத்திலில்லாதவர்கள், தனிகர்கள், எளியவர்கள், பல கல்விக் கூடங்களிலிருந்தும் பெருவாரியான மாணாக்கர்கள், சினேகிதர்கள், உறவினர்கள், சிஷ்யர்கள், பெரியவாளிடம் பெருமதிப்பு வைதிருந்தவர்கள் முதலியோரின் கூட்டம் சுடுகாடுவரை நீண்ட ஊர்வலமாகச் சென்றது. அங்கு சடங்குகளெல்லாம் முடிந்தவுடன், ஒவ்வொருவரும் உலகத்தில் இனி இட்டு நிரப்ப முடியாத சூன்யமேற்பட்டு விட்டது என்று உணர்ந்தார்கள்.

## பதினாறாவது அத்தியாயம்

## ஒரு மஹான்

பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளைப் பற்றின இந்த சுருக்கமான வாழ்க்கைக் குறிப்பை அவர்களுடைய ருசி, அபிலாஷை பிரவிருத்தி முதலியன எவ்வாறு அமைந்திருந்தனவென்பதை அவர்களுடன் நெருங்கிப் பழகி, அவரைப் பற்றி அந்தரங்கமாக அறிய வாய்ப்புப் பெற்றவர்களிடமிருந்து கிடைத்த தகவலைக் கொண்ட விமர்சித்துவிட்டு முடிக்க விரும்புகிறோம். அவர்களின் பின்பகுதி பூராவும் அனேகமாக வேதாந்தம் மற்றும் மதம் சம்பந்தமான விஷயங்களைப் போதிப்பதிலேயே கழித்து வந்தாலும் காவ்யம், நாடகம் இவைகளில் அவருக்கிருந்த ஆழ்ந்த ரஸனையும், ஈடுபாடும் கடைசிவரைக் கொஞ்சம்கூடக் குறையாமலிருந்தன. மஹாகவி காளிதாஸன், முராரி, ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இவர்களின் கிரந்தங்கள் மிகவும் பிடித்தவை. வேதாந்த தேசிகருடைய கிரந்தங்களையும் கூடப் போற்றுவதுண்டு. அவர் செய்த "ஸங்கல்ப ஸூர்யோதய" என்ற கிரந்தத்திலிருந்து அடிக்கடி மேற்கோள் எடுத்துச் சொல்வதுமுண்டு. வைஷ்ணவ வித்வான்கள் பலரும் "தத்வமுக்தகல்பம்" "அச்யுத சதகம்" என்ற வைஷ்ணவ மத சம்பந்தமான கிரந்தங்களில், கடினமான, நெருடான

இடங்களுக்குச் சரியான விளக்கம் கோரி சாஸ்த்ரிகளைத் தான் அணுகுவார்கள். மத்வமதக் கோட்பாடு சம்பந்தமான கிரந்தங்களிலும் சாஸ்த்ரிகளுக்கு நல்ல பரிச்சயம் உண்ட என்பத எல்லோருமறிந்த விஷயம். அவர்களுக்கு புத்தகங்களிடம் அபாரமான ஆசை இருந்தது. அதுவும் ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதரின் கிரந்தம் என்றால் அவருடைய ஈடுபாட்டைச் சொல்லி முடியாது. இது பின்வரும் நிகழ்ச்சியிலிருந்து தெளிவாகும். திருவாரூரில் ஒருவரிடம் "சிவார்க்க மணிதீபிகை"யின் ஒரு ஓலைச்சுவடி இருப்பதாகத் தெரிந்தது. அந்த நபரோ தன் ஓலைச்சுவடியை யாருக்கும் கடனாகக்கூட கொடுத்து வைக்க இஷ்டப்படவில்லை - சுவடியின் மதிப்புத் தெரிந்தவரின் இந்தக் கொள்கை மன்னிக்கத் தகுந்ததே - சாஸ்த்ரிகள் இந்தச் சுவடியைப் பரிசீலனை செய்ய எண்ணி தனது முதிர்ந்த வயதில் திருவாரூர் சென்ற மூன்று நாட்கள் தங்கினார்கள் என்றால் அவரின் ஈடுபாட்டை நாம் ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். சில காலம் கழித்து கும்பகோணம் ஸ்ரீ ஹாலாஸ்யநாத சாஸ்த்ரி இந்த உத்கிருஷ்டமான கிரந்தத்தை அச்சில் புத்தக ரூபமாக வெளியிட்ட போது சாஸ்த்ரிகளின் ஆனந்தம் கரை புரண்டோடியது.

ஒழிந்த நேரங்களில் அவர்களது பொழுது போக்கு ஸ்ரீமத் ராமாயணம், மஹாபாரதம் முதுலிய இதிஹாஸங்களைப் படிக்கக் கேட்பது என்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

உபாஸனா விஷயத்தில் தான் பூஜிக்கும் இன்னதெய்வம் தான் உயர்ந்தது என்ற ஒருதலைப்பட்ட வெறி அவர்களிடம் ஒருபொழுதும் தலைகாட்டியதில்லை. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியும், ஸ்ரீ கிருஷ்ணரும் அவரால் சமமாகவே கொண்டாடப் பெற்றார்கள். திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி இடத்திலும் மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமியிடத்திலும் அவர்களுக்கு வாழ்நாள் முழுக்க ஒரு விசேஷ பக்தி இருந்து வந்தது. இந்த இரு தெய்வங்களுக்கும் நடத்தப்படும் வருடாந்திர உத்ஸவங்களுக்கு சாஸ்த்ரிகள் தவறாமல் போவதுண்டு. மேலும் இந்த

தெய்வங்களைப் பற்றியும் அவைகளுக்கு நடத்தப்படும் வருடாந்திர உத்ஸவங்களைப் பற்றியும் சாஸ்த்ரிகள் பக்தி சுலோகங்கள் கவனம் செய்து நமக்கு விட்டுச் சென்றுள்ளார்கள். அவர்களால் எங்காவது வெளியூர் செல்ல நேர்ந்த சமயங்களில் கூட ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமியின் "சந்திரப் பிரபா" உத்ஸவதினத்தன்று தரிசனத்திற்கு நிச்சயமாக மன்னார்குடி திரும்பி விடுவது என்று வைத்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீ தியாக ராஜ ஸ்வாமியின் ருத்ரபாத உத்ஸவத்தின்போது சாஸ்த்ரிகள் திருவாரூர் போய் அங்கு கமலாலயத் திருக்குளத்தின் வடகரையில் மூதாதையர் வழிவந்த க்ருஹத்தில் வசித்து வந்த தனது சகோதரன் பிள்ளை ஸ்ரீ ஸ்வாமி தீக்ஷிதருடன் தங்குவார். ஒரு சமயம் சாஸ்த்ரிகளை ஒருவர் "வேதாந்த ஞானமில்லாத பாமர ஜனங்களின் மதப்பற்றை ஊக்குவிப்பதற்காகவே ஏற்பட்ட இந்த கோவில் உத்ஸவாதிகளில் தாங்கள் இவ்வளவு தீவரமாகக் கலந்து கொள்வது தங்களுக்கு அவசியம் தானா?" என்று கேட்டு ஆச்சரியப்பட்டார். அதற்கு மறுமொழியாக சாஸ்த்ரிகள் சொன்னது : "ஒரு படித்தவனுக்கு மோக்ஷத்தை அடைய ஞானமாக்கத்தை அப்யஸிப்பது எவ்வளவு முக்கியக் கடமையோ அவ்விதமே லோக ஸங்கிரஹமும் அதாவது பாமர ஜனங்களுக்கு வழிகாட்டியாக நடந்து கொள்வதும் அவ்வளவு முக்கியக் கடமையாகிறது."

அதிசயிக்கத்தக்க பண்பும் உயர்ந்த குணவிசேஷங்களும் கொண்ட ஒருவரிடம் நாம் எதிர்பார்க்கும் அளவு அக்கரையுடனும். அன்புடனும் சாஸ்த்ரிகள் தன் குடும்பத்தாரிடம் பழகி வந்தார். எல்லோரிடமும் அன்பைச் சொரிவார். மற்றவர்கள் உணர்வுக்குப் பெருமதிப்புக் கொடுத்து நடப்பார். வயது முதிர்ந்த தனது தாயாரிடம் அவருக்கிருந்த பாசமும் மதிப்பும் எல்லையற்றது. ஒருநாள் அவர்கள் பிள்ளையிடம் தனக்குப் போட்ட இட்லி புளித்தது என்று சொல்லவே, சாஸ்த்ரிகள் தனது தாயாருக்குத் திருப்தியாக அவர்களை வீட்டிலுள்ளோர் கவனிதத்துக் கொள்ளவில்லையானால் இனி தானே தாயாருக்கு மாவரைத்து

தோசை இட்லி செய்து கொடுத்துக் கொள்கிறேன் என்று முழங்கினார்கள்.

சாஸ்த்ரிகள் தனது சஹோதரனிடத்திலும் அவர் பிள்ளைகளிடமும் மிகவும் அன்புள்ளவராக இருந்தார். சஹோதரர் பிள்ளைகளில் ஒருவரான மதுரை ஸ்ரீ A.மஹாலிங்க அய்யர் மன்னார்கடி குடும்பத்தோடு மிக்க நெருக்கமான தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததோடு தனது முத்தண்ணா ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதருக்கு (அதாவது சாஸ்த்ரிகளின் ஸ்வீகாரக் குமாரருக்கு) குடும்ப நிர்வாக விஷயமாக உதவியும் செய்த வந்தார்.

குடும்பத்திலுள்ள லௌகிக விஷயங்கள், பணங்காசு வ்யவஹாரம் முதலியவற்றையெல்லாம் சரிவர கவனித்து நடத்தும் முழு பொறுப்பையும் சாஸ்த்ரிகள் ஸ்வீகாரப் பிள்ளையிடமே விட்டு விட்டார். பெரியவாளுக்கு பக்தர்களால் சமர்ப்பிக்கப்படும் பொருள், வெகுமானம் இவற்றையெல்லாம் ஸ்வீகாரப் புத்திரனே பொறுப்பாக எடுத்து வைத்துப் பங்கீடு செய்வது வழக்கமாயிற்று.

ஒரு சமயம் பெரியவாளைத் தரிசிக்க வந்த ஒரு கனவான் பெரியவாள் காலடியில் ஒரு பெருந்தொகையை நாணங்களாகச் சமர்ப்பித்தார். அன்ற ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் வெளியூருக்குச் சென்றிருந்தார். சாஸ்த்ரிகள் அந்த நாணயக்குவியலை அப்படியே எடுத்து அக்னிஹோத்திர அறையின் சுவற்றின் மேல்பரப்பில் வைத்து விட்டுத் தன் காரியங்களைக் கவனிக்கலானார். அங்கேயே அந்த நாணயங்கள் கிடந்தன. ஆனால் சில தினங்கள் கழித்து ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் திரும்பி வந்த பொழுது அங்கே அந்தப் பணத்தைக் காணவில்லை. அக்னிஹோத்திர அறைப் பக்கம் யாரும் போகத் துணிய மாட்டார்கள். ஆனால் இக்குடும்பத்துக்குத் தூரத்து உறவினனாகவும், அடிக்கடி அந்த வீட்டுக்கு வந்து போகிறவனாகவும் இருந்த ஒரு சிறுவன்தான் அந்த நாயணத்தையெல்லாம் மெள்ள மெள்ள எடுத்துப் போயிருக்க

வேண்டுமென ஊகித்துக் கொண்டார்கள். ஆனால் பணம் காணாமற்போன விஷயமே சாஸ்த்ரிகள் காதுக்கோ, வெளியே யாருக்குமோ அம்பலப்படுத்தப் படவில்லை.

ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் ஊரிலில்லா நேரம் இம்மாதிரி சாஸ்த்ரிகளின் கையில் தங்க நேரும் பொருளை பொறுப்பில்லாத புருஷனுக்கு வாழ்க்கைப்பட்ட சாஸ்த்ரிகளின் இரண்டாவது பெண்தான் வாங்கிக் கொள்வது வழக்கம். இந்தப் பெண்ணின் மாமனார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரிடம் வாங்கியிருந்த கடன் பத்திரம் காலாவதியாகும் தருணத்தில் இருந்தது. அப்பொழுது தீக்ஷிதர் ஸ்வீகாரத் தகப்பனாரை சம்பந்தி பேரில் ப்ரோநோட்டின் காலாவதி கெடுக்குள் தாவா போடலாமா என்று கேட்டார். அதற்கு சாஸ்த்ரிகள் "உனக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அப்படிச் செய். இந்த விஷயங்களில் நான் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை" என பதிலளித்தார்கள். வாழ்க்கையின் லௌகிக விஷயங்களில் அவருக்கிருந்த இந்தப் பற்றற்ற தன்மை குழந்தைப் பருவம் முதல் கடைசி காலம் வரையில் அவரிடம் குடி கொண்டிருந்த ஸ்வாபாவிகமான குணாதிசயங்களில் ஒன்று. வாழ்க்கையில் அவரது ஒரே எண்ணம் தர்மத்தைக் கொஞ்சமும் வழுவாமல் கடைப்பிடிப்பது தான். அந்த தர்மமே மோக்ஷத்திற்கு இட்டுச்செல்லும் ராஜபாட்டையென்று உறுதியாக நம்பினார். வாழ்க்கையில் மற்றெதுவம் அவர்களுக்கு ஒரு பொருட்டாகத் தென்பட்டதில்லை. தான் அமைத்துக் கொண்ட இந்த உத்தமமான வழியைத் தளர்த்திக் கொள்ளவோ இதர விஷயங்களில் மனதை ஓடவிட்டு தன் சக்தியை சிதறவிடவோ இடங்கொடுக்காத அளவுக்குத் த்ருடமான ஒரே குறிக் கோளுடனும், பிரசாந்தத்துடனும் அனுஷ்டித்து வந்தார்கள். தனம், கௌவரம், புகழ் இவைகள் கிட்டாமலிருந்த பொழுதும் அவர் அவைகளைத் தேடியலைந்ததில்லை, அவைகள் எந்த முயற்சியுமில்லாமல் இவரைத் தேடி வந்த சமயத்திலும் அவைகளை ஆவலுடன் கூடிய சந்தோஷத்துடன் வரவேற்றது மில்லை. அவர் வாழ்நாள் முழுவதும் ஒரு ஏழையாகவே காலம்

தள்ளினார். ஆனால் ஏழ்மையின் வேதனையை அவர் ஒரு பொழுதும் அனுபவித்ததில்லை. ஸ்ம்ருத்தியால் அடையக்கூடிய சுகவாஸத்திற்கும் அவர் ஆசைப்பட்டதில்லை.

தாங்கள் மிக்க உயர்ந்ததாக மதித்த கொள்கைக ளெல்லாம் மூர்த்தி எடுத்து வந்தாற்போல இருந்த சாஸ்த்ரிகளை வெகுவாகக் கொண்டாடி பூஜித்து வந்த ஒரு தனிகர்களின் கூட்டத்தின் பேராதரவால் தானாகப் பெருகும் ஊற்றினால் நிரம்பும் கிணற்றைப்போல், ஆரம்பம் முதல் கடைசி வரை பெரியவாள் என்கிற ஸ்தாபனமானது உதவி செய்யப்பட்டு வந்தது. பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகளிடம் தற்பெருமையோ அகங்காரமோ கொஞ்சம்கூட இருந்ததில்லை. அதே சமயம் அவரது வினயமோ வியக்கத்தக்கது.

சாதாரணமாக படித்தவர்களிடம் அவர்கள் எவ்வளவு கீர்த்தியையடைந்திருந்தாலும் காணப்படுகிற சில்லரைப் பொறாமைகளும், அசூயை கலந்த வம்பு முதலியனவும் சாஸ்த்ரிகளிடம் அறவே கிடையாது. அம்மாதிரிக் கீழான காரியங்களில் மனதைச் செலுத்த நேரமும் இருந்ததில்லை.

சாஸ்த்ரிகளின் குணாதிசயங்களில் நமது கவனத்தையெல்லாம் ஈர்ப்பது அவர்களது அபரிமிதமான குருபக்தி தான். அதை தெய்வபக்திக்குத் தான் இணையாகச் சொல்லலாம். தனது முதல் குருவாக அமைந்த ஸ்ரீ கோபாலாசார்யாளிடம் சாஸ்த்ரிகளுக்கு மிகுந்த மரியாதை மட்டுமில்லை; பேரன்பும் இருந்தது. தனக்குக் கிடைத்திருக்கும் நிலைக்கு தனது குருவின் அன்பும் ஔதார்யமுமே தான் காரணம் என்று அடிக்கடி சொல்லுவார்கள். இது மேலுக்காக உதட்டிலிருந்து வந்த மரியாதைச் சொற்கள் அல்ல. ஸ்ரீ கோபாலாசார்யாள் மறைந்த பிறகும் கூட குருவைப் பற்றி இவர் பண்ணும் ஸ்மரணை முன் போலவே உள்ளன்புடனும் நிரந்தரமாகவும் இருந்ததென்றால் இவரது குருபக்தி எவ்வளவு ஆழமாக இவர் ஹ்ருதயத்தில் வேரூன்றியிருந்ததென்று

ஊகிக்கலாம். ஸ்ரீ கோபாலாசார்யாளின் சிராத்த தினத்தன்று சாஸ்த்ரிகள் வெகு தாமதித்துத் தான் பகல் போஜனத்துக்கு வருவார்கள். குரு அவருக்கு ஆத்ம ஞானத்தைக் கொடுத்த தந்தையாவார். ஆகவே தகப்பனாருக்குக் கொடுக்க வேண்டிய அன்பு மரியாதையெல்லாம் குருவுக்கும் கொடுத்தார்.

உபாகர்மா தினத்தன்று சாஸ்த்ரிகள் பூஜைமுதலியவற்றை முடித்துவிட்டு, சாப்பிட உட்காரும் முன், தனது குரு ஸ்ரீ கோபாலாசார்யாளின் கிருஹத்திற்கு நடந்து சென்று குரு பத்தினிக்கு வந்தனம் செய்து விட்டு அவாக்ளது ஆசியைப் பெற்று வருவார்கள்.

மேலும் ஸ்ரீ கோபாலாசார்யாளின் புதிரன் ஸ்ரீ கிருஷ்ணமா சார்யாவை ஒவ்வொரு தினமும் முதல் தடவையாக சந்திக்கும் பொழுது - வயதில் தனக்கு அவர் எவ்வளவு இளையலராக இருந்தும், தன்னிடமே பாடம் கேட்கும் மாணவனாகவும் இருந்த போதிலும் - தனது குருவின் புத்திரன் என்று மரியாதை காட்டும் விதமாய், தான் எழந்து நின்று கொண்டு வரவேற்பார்கள்.

மற்ற குருக்களான ஸ்ரீ நாராயணானந்த ஸரஸ்வதி, ஸ்ரீ ஸ்வயம்பிரகாச ஸ்வாமிகள் இவர்களைப் பற்றிய ஸ்மரணையும் இதேபோல் பூஜார்ஹமாகவும், பக்தி மேலிட்டதாகவும் தான் இருந்தது. இந்த குருக்கள் ஞாபகமாக அவர்கள் ஸித்தி அடைந்த புனித திதிகளில் அவர்களுக்கு, ஆராதனை நடத்தினார்கள். தவிர கஞ்சனூரிலிருந்த ஸ்ரீஸ்வயம்பிரகாச ஸ்வாமிகளின் ஸமாதிக்கு வருஷத்திற்கொருமுறை சென்று தனது அஞ்சலி பூஜையை செலுத்தி வருவார்கள். வயதில் பெரியோர்கள், உபாத்யாயர்கள், மரியாதைக்குகந்த மகான்கள் இவர்களுக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டுமென்பது ஸ்மிருதிகள் விதிக்கும் கடமை, பிரம்மஸ்ரீ சாஸ்த்ரிகள் பிறர் மரியாதை காண்பிக்க வேண்டிய தனது முதிர்ந்த வயதிலும் கூட - தனக்கு மக்களிடையில் உயர்ந்த ஸ்தாணமிருந்த போதிலும் - ஸ்மிருதியின் கட்டளைகளைச் செயலாக்குவதில் தானே ஒரு

முன்னுதாரணமாக இருக்க வேண்டுமென்று, வணங்க வேண்டிய இடத்தில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பார்கள்.

தன்னிடம் சிஷ்யர்களாகவிருந்த ஸந்யாசிகளை எப்படிப் பெரியவாள் வகுப்பில் பாடம் ஆரம்பிக்குமுன் வந்தனம் செய்துவிடுவார்கள் என்பதை முன்னமேயே பார்த்துவிட்டோம். ஸ்ரீ பழமாநேரி ஸ்வாமிகள், தனது குரு இந்த மாதிரி ஸம்ப்ரதாயத்திற்காக ஒவ்வொரு நாளும் தனக்கு வந்தனம் செய்வது தனக்கு எவ்வளவு தர்ம சங்கடமாக இருக்குமென்பதை தனது சிஷ்யன் ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்த்ரிகளிடம் அடிக்கடி சொல்வது வழக்கம்.

சாஸ்த்ரிகள், திருவாரூர் போகும் போது வழியில் லக்ஷ்மணக்குடியைத் தாண்டும் போது, அங்கு வசித்து வந்த தனது மாமியாரின் (இறந்து போன முதல் மனைவியின் தாயார்) காலில் விழுந்து வணங்கத் தவறியதில்லை.

சாஸ்த்ரிகளுடைய கடைசி நாட்களில் ஒருவர் "தங்களுக்க ஸந்யாஸாச்ரமம் வாங்கிக் கொள்ள எண்ணமுள்ளதா?" என்று கேட்டதற்கு "அப்படியொன்றுமில்லை, நான் பந்த பாசங்களை முற்றும் துறந்தவனாக இல்லையே! தவிர நமது பெரிய தீக்ஷிதர் அவர்களே (ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதர்) ஒரு க்ருஹஸ்தனாகத் தானே நிர்யாணமடைந்தார்கள்" என்று பதிலுரைத்தார்கள்.

1. எண்ணத்தில், வார்த்தையில், செய்கையில் பரிசுத்தம்;

2. உலகத்தின் லௌகிக விஷயங்களில் குறிப்பிடத்தக்க வகையில் - அக்கறையின்மை;

3. தனக்கென வைத்திருக்கும் லக்ஷ்யத்தை அடைய முழு மூச்சுடனும், பக்தி சிரத்தையுடனும் கூடிய விடாமுயற்சி;

4. மஹாமஹோபாத்யாய விருதுகள் பெற்றவரனேகர் உள்ளடங்கிய பெரிய சிஷ்ய பரம்பரையையுடைய மஹத்தான ஒரு போதகருக்கு வேண்டிய ஸர்வ லக்ஷணங்களும் பொருந்திய உபதேசகர்.

5. ஒரு உண்மையான லக்ஷ்ய பிராமணனின் வாழ்வு எப்படி இருக்க வேண்டுமென்பதற்கு தற்காலத்தில் பிரத்யக்ஷ உதாரணமாகத் திகழ்ந்தவர்;

6. நமது ஞாபகத்திற்குத் தெரிந்த வரை, சமீப காலத்தில் அரை நூற்றாண்டுக்கும் மேலாக பழைய காலத்து ரிஷிகளின் புகழை எடுத்துக்காட்டும் வகையில் வாழ்ந்த புண்ணிய புருஷர்;

7. "ஸர்வதந்த்ர ஸ்வதந்தரர்" என்ற விசேஷணத்திற்கு பூர்ணமாகத் தகுதியுடையவர்;

8. இந்த ஸம்ஸார பாசபந்தங்களுக்குள் இருந்து கொண்டே "பிரத்யக் ஆத்மா" வைத் தேடியடைந்த மஹான்.

9. தன்னுடைய வாழ்நாளிலேயே "மஹான்" என்று எல்லோராலும் மதித்துப் போற்றப்பட்டவர்;

10. இப்படியெல்லாம் வாழ்ந்த மஹான் மன்னார்குடி பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள். அவர்களது ஞாபகம் நமக்கு என்றும் இருக்கட்டும். அவர்களது வாழ்க்கை நமக்கு முன் உதாரணமாகவிருந்து நம்மை எப்பொழுதும் ஊக்குவித்து உத்ஸாகப்படுத்தி, நல்வழியில் செல்ல வழி காட்டட்டும்.

ஓம் தத் ஸத்

## மன்னார்குடிப் பெரியவாள் என்ற

## ஸ்ரீராஜு சாஸ்த்ரிகளின் வம்சாவளி

"தீக்ஷிதர்" வம்சத்திற்கு கூடஸ்தராக இருந்தவர் ஸ்ரீமான் "ஆசான்" அதாவது ஆசார்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள் என்று தெரிகிறது. இவர்களின் குமாரர் ஸ்ரீமத் ரங்க ராஜாத்வரீ அவர்கள். அவர்களுக்குண்டான இரண்டு ஸந்ததிகளில் மூத்தவர்தான் அவதார புருஷர்களான ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள். இளையவர் ஸ்ரீமத் ஆசான் தீக்ஷிதர்

அவர்கள். இவர்களின் வம்சத்தில் உதித்தவர்தான் மதுரை ஸமஸ்தானத்திலிருந்து பிறகு பாலமடையில் குடியேறிய வரும் பிரஸித்திபெற்ற கவியுமான ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் ஆவர். இவர் ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் தம்பி பேரனாவர்.

ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதேந்திரர்களுக்கு நீலகண்ட, உமா மஹேச்வர, தர்மய்ய தீக்ஷிதர்கள் என்று மூன்று குமாரர்கள் மூத்தவரான நீலகண்ட தீக்ஷிதருக்கு கனகசபாபதி, பிரபாகர, ஸித்தம் அப்பய்ய தீக்ஷிதர்கள் என்று மூன்று ஸத்புத்திரர் களுண்டானார்கள். இவர்களின் கடைசியான ஸித்தம் அப்பய்ய தீக்ஷிதருக்கு ஏற்பட்ட மீனாக்ஷி வல்லப, பவானி சங்கர தீக்ஷிதர்கள் என்ற குமாரர்களில் மூத்தவரான ஸ்ரீ மீனாக்ஷி வல்லப தீக்ஷிதருக்கு ஐந்து புத்திரர்கள். இவர்களில் ஸந்ததி இல்லாத இருவரின் பெயர்கள் தெரியவில்லை. மற்ற மூவர் மார்க்கஸஹாய, கங்காதர, பிரபாகர தீக்ஷிதர்களாவார்கள். இவர்களின் நடுவரின் வம்சம் மூன்று தலைமுறைக்கு ஏக புத்திர விஷயமாக அமைந்தது. அதாவது ஸ்ரீ கங்காதர தீக்ஷிதருக்கு ஒரே குமாரனாக மார்க்கஸஹாய தீக்ஷிதரும், அவருக்குப் புத்திரனாக தியாகராஜ தீக்ஷிதரும், அவருக்கு ஏக புத்திரனாக அப்பாமார்க்கஸஹாய தீக்ஷிதரும் உதித்தார்கள். இந்தக் கிளை தான் திருவாரூரையடுத்த கூத்தம்பாடி கிராமத்தில் வந்து தங்கியது.

ஸ்ரீ அப்பாமார்க்கஸஹாய தீக்ஷிதருக்கு நான்கு புத்திரர்கள், அவர்களில் மூத்தவர்தான் மன்னார்குடியில் வந்து தங்கின மஹான் தியாகராஜ மகீ என்ற மஹாமஹோபாத்யாய மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் (1815-1903).

இவர்களின் தம்பிகளான அப்பா தீக்ஷிதர், கிருஷ்ண தீக்ஷிதர், வைத்தியநாத தீக்ஷிதர் என்ற மூவரில் ஸ்ரீ அப்பா தீக்ஷிதர்களுக்குத்தான் புத்திரர்கள் ஆறு பேரிருந்தனர். அவர்களில் மூத்தவரான ஸாமி தீக்ஷிதர் திருவாரூரில் வசித்தார். மூன்றாவதான ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளுக்கு

ஸ்வீகாரப் புத்திரனாக எடுத்துக் கொள்ளப்பட்டார், மற்ற நால்வர்களான மஹாலிங்கய்யர், விஸ்வநாதய்யர், ஸுந்தரமய்யர். ஸாம்பமூர்த்தி அய்யர் முதலானோர் லௌகிக விருத்தியை ஆச்ரயித்த மதுரையில் குடியேறினார்கள்.

ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகளின் ஸ்வீகாரப் புத்திரன் "கண்டு தீக்ஷிதர்" என்று செல்லமாக அழைக்கப்பட்ட ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதருக்கு மஹாமஹோபாத்யாய ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் ஏக புத்திரனாகப் பிறந்தார். இவர்கள் காலம் 1876 முதல் 1940 வரை ஆகும். இவர்கள் 1918க்குப் பிறகு கும்பகோணத்திலேயே வசித்தார்கள். இவாக்ளது தகப்பனார் கண்டு தீக்ஷிதரும் அதே சமயம் பக்கத்தில் உள்ள திருவாலங்காடு கிராமத்தில் நிலபுலன்களும் வீடும் வாங்கிக் கொண்டு தங்கி வந்தார்கள்.

ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள் ஐந்து புத்திரர் ஐந்து புத்திரிகளைப் பெற்ற பெரிய "ஸம்ஸாரி" யானாலும் பற்றில்லாமல் வாழுந்த மஹானாவார். பிள்ளைகளில் மூத்தவரான ய.மகாலிங்க சாஸ்த்ரி M.A.,B.L., ஸம்ஸ்கிருதத்தில் நாடகங்கள், காவ்யங்கள், ஸுபாஷிதம், சிக்ஷாபாடம், க³த்ய கிரந்தங்கள், கீர்த்தனைகள் முதலியன இயற்றி ஸ்ரீ காஞ்சி முனிவரால் "கவிஸார்வ பௌம" என்ற விருதும் அளிக்கப்பட்ட கவியாவார். தமிழ் ஆங்கிலத்தில் ஹாஸ்யக் கட்டுரைகள் ஜோதிட ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி பிரஸித்தியானவரும் ஸ்ரீ சாஸ்த்ரிகளின் சரித்திரத்தை ஆங்கிலத்தில் எழுதி அளித்தவருமாவார். (1897-1967).

இரண்டாவது புத்திரன் Y.விச்வநாத சர்மா M.A.L.T., 32 வயதே வாழ்ந்தாலும் 7, 8 வருடங்கள் போடிநாய்க்கனூர் விக்டோரியா மெமோரியல் ஹைஸ்கூலில் தலைமையாசிரியராகச் சிறப்பாகப் பணியாற்றியவர் (1905-1937).

மூன்றாவது புத்திரன் Y.கிருஷ்ணமூர்த்தி M.A., இந்தியன் வங்கியில் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றி ஓய்வெடுத்தார். தர்க்க வேதாந்த சாஸ்திராப்யாசம் செய்தவர். (1913-1977).

நான்காவது புத்திரன் Y.ஸாம்பமூர்த்தி மத்திய அரசுப் பதவிகளில் உழைத்துக் கடைசியாக BARCயில் Dy. ESTT. Officer பதவியிலிருந்து ஓய்வெடுத்தவர். ஸ்ரீ காஞ்சி ஆசார்யாள் முகாமில் சிறிது காலம் "கஜானா" கைங்கர்யம் பண்ணும் பாக்கியம் பெற்றவர். இப்புத்தகத்தை தமிழாக்கம் செய்திருக்கும் ஆசிரியனுமாவார் (Birth 1917). தற்பொழுது சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் வசித்து வருகிறார்.

ஐந்தாவது புத்திரன் Y.ராஜகோபாலன், B.A.B.T. தஞ்சாவூர் ஜில்லாவில் Govt. Boys High School-களில் கெஜட்டட் ஹெட்மாஸ்டராகப் பேரும் புகழுடன் பணியாற்றி ஓய்வு பெற்றவர் (Birth 1920). தற்சமயம் சென்னைக்கடுத்த குரோம்பேட்டையில் வசித்து வருகிறார்.

ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகளின் ஐந்து புத்திரிகளும் நல்ல இடங்களில் விவாகம் செய்து கொடுக்கப்பட்டிருந்தனர். ஸ்ரீமதிகள் 1). ஸுந்தரத்தின் கணவர் மைலாப்பூரில் பிரபல வக்கீலாக இருந்த R.ராமமூர்த்தி அய்யர், 2). லக்ஷ்மியின் கணவர் சிறந்த கணித ஆசிரியரான சிவராமபுரம் S.K.ராமமூர்த்தி அய்யர் M.A.,L.T., 3). ஸரஸ்வதியின் கணவர் தென் ரயில்வே இஞ்ஜினியரிங் ஆபீஸில் வேலை செய்து தற்போது ஓய்விலிருக்கும் வடுவூர் ஸ்ரீ M.S.வெங்கிடராமன், B.A., 4). ருக்மிணியின் கணவர் சிதம்பரம் பிரபல வழக்கறிஞரான S.சீனுவாஸ சாஸ்த்ரியின் மகன் K.S.துரைசாமி சாஸ்த்ரி, 5). பார்வதியின் கணவர் தென் ரயில்வே FA&CAO-ஆபீசில் அக்கௌண்ட்ஸ் ஆபீசராக பணி செய்து ஓய்வு பெற்ற செறுகுடி S.V.வெங்கட்ராமன், M.A., ஆவர்.

ஆக மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதருக்கு ஒன்பதாவது தலைமுறையினராகவும் இப்புத்தகத்தை ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதிய ஸஹோதரர்கள் பன்னிரண்டாவது தலைமுறையினராக அமைவதையும் பார்க்கிறோம். தீக்ஷிதர்-1, நீலகண்ட தீக்ஷிதர்-2,

ஸித்தம் அப்பய்ய தீக்ஷிதர்-3, மீனாக்ஷிவல்லப தீக்ஷிதர்-4, கங்காதர தீக்ஷிதர்-5, மார்க்கஸஹாய தீக்ஷிதர்-6, தியாகராஜ தீக்ஷிதர்-7, அப்பா மார்க்கஸஹாய தீக்ஷிதர்-8, மன்னார்குடி ஸ்ரீராஜு சாஸ்த்ரிகள்-9, நீலகண்ட தீக்ஷிதர்-10 யக்ஞஸ்வாமி சாஸ்த்ரிகள்-11 Y.மஹாலிங்க சாஸ்த்ரிகளும், Y.சாம்பமூர்த்தியும் -12 என்பது மேற்கண்ட வம்சாவளியின் சுருக்கமாகும். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் பரம்பரை மேலும் மேலும் வாழையடி வாழையென வளர்வதாக.

---

## மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள் ஜாதகம்

ஸ்வஸ்திஸ்ரீ யுவ வருஷம் வைகாசி மாதம் 27ம் தேதி (28.05.1915) ஞாயிற்றுக்கிழமை திருவோண நக்ஷத்திரத்தில் சுப ஜனனம்.

<table>
<tr><td></td><td></td><td>சூரி<br>புதன்</td><td>ராகு<br>சுக்ரன்</td></tr>
<tr><td>செவ்</td><td colspan="2" rowspan="2">ராசி</td><td></td></tr>
<tr><td>சந்<br>சனி (வ)</td><td></td></tr>
<tr><td>கேது</td><td></td><td></td><td>ல<br>குரு (வ)</td></tr>
</table>

ஜனன காலத்தில் சந்த்ர தசை இருப்பு வரு. 6, மா. 6, நா. 23

ஸ்ரீ மன்னார்குடி பெரியவாளுக்கு இரண்டு பெண்கள் இருந்தார்கள். அவர்கள் ஜானகி, சாவித்ரி ஆவார்கள்.

ஜானகி அம்மாளுக்கு அலமேலு, சீதாலக்ஷ்மி என்று இரண்டு பெண்கள், ராமநாதன் என்று ஒரு பிள்ளை இருந்தார்கள். அலமேலு அம்மாளின் கணவர் கோமல் வெங்கடராமய்யர் ஆவார். இவர்களுக்கு, ஏழு பிள்ளைகள் ஒரு பெண். அவர்கள், சுந்தரராமன் (மங்களம்), கோபாலன் (சாரதாம்பாள்), நாராயணன் (மங்களம்), தியாகராஜன் (லக்ஷ்மி), சீதாராமன், மணி (ஜானகி), வேதம் (ஜானகி) மற்றும் சீதாலக்ஷ்மி என்ற பெண்ணும் ஆவார்கள்.

ஜானகி அம்மாளின் இரண்டாவது பெண் சீதாலக்ஷ்மியின் கணவர் பெயர் செருகுடி குப்புஸ்வாமி ஆவார். இவர்களுக்கு ராஜு, சுகந்தா என்று ஒரு பிள்ளை, ஒரு பெண்.

இவர்களுடைய சந்ததியினர் தற்போது ஹைத்ராபாத் செகன்றாபாத்திலும், சிலர் மாயவரத்திலும் வசிக்கிறார்கள். பிள்ளை ராமனாதன் பற்றி தகவல் கிடைக்கவில்லை.

பெரியாவளின் இரண்டாவது பெண் சாவித்திரி அம்மாளுக்கு குஞ்சு என்று ஒரு பெண் இருந்து, பின் சந்ததி இல்லை.

மேற்படி தகவல்கள், பாலாம்மாள் (அலமேலு அம்மாவின் பெண் சீதாலக்ஷ்மியின் பெண்), மற்றும், G. கல்யாணராமன் (அலமேலு அம்மாவின் பிள்ளை கோபலனின் பிள்ளை) அவர்களிடம் சேகரிக்கப்பட்டது.

## ABOUT THE AUTHOR

Born on 1-11-1917 as the fourth son of Mahamahopadhaya Brahmasri Yagnaswami Sastrigal in the illustrious Appayya Dakshita family, Sri Y. Sambamurthy graduated in 1939 and joined central service in 1940. Having served in various capacities in salt, Central Excise and Atomic energy departments, finally retired in 1975 from B.A.R.C., Trombay, as a class I officer.



After retirement, he was associated with the Sri Kanchi Kamakoti Mutt till June 1979, when he had to leave it on medical grounds. There after too leading a simple and disciplined life with pious activities ever ready to be of service to others, he is held in great regard by relatives, friends and neighbours.

Though equipped with a working knowledge in Sanskrit, he regrets that he did not acquire scholarship and sastric knowledge in the footsteps of his forefathers. A talented Harmonist, he is a favourite accompaniment in Hari Kathas and Bhajans. Presently, he is the president of the Tamilnadu Brahmin Association, Raja Annamalaipuram Unit.